4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண் எம். 8798



# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 9-ஏ ] (மதுரை 20—11—71 சனி) [ மலர் 79

**மாநில மாநாட்டிற்கு முன் மாநிலக் குழுக் கூட்டம்**

**தோழர்களின் கவனத்திற்கு**

தோழர்களே !

நமது மாநிலக் குழுக் கூட்டம் 24—11—71-ம் தேதியன்று காலை சேலம் நகர் அஸ்தம்பட்டியிலுள்ள நகராட்சி பயனியர் விடுதியில் நடைபெறும்.

மாநிலக் குழு உறுப்பினர்கள் சேலம் ஜங்ஷனிலிருந்தும், சேலம் டவுன் மத்திய பஸ் நிலையத்திலிருந்தும் அஸ்தம்பட்டிக்கு டவுன் பஸ்ஸில் வரலாம்.

பயனியர் விடுதி அஸ்தம்பட்டி பஸ் நிலையத்திற்கு அருகிலேயே உள்ளது.

வாழ்த்துக்கள்,

மா. க. செயற் குழு.

# தூதுவர்கள் நியமிக்க வாய்ப்பு அதிகரித்துள்ளது

## இந்திய-சீன உறவு குறித்து சுவரண்சிங் அறிவிப்பு

புதுடெல்லி, நவ. 18—

"இந்தியாவும் சீனுவும் தங்களது பிரதிநிதியகங்களைத் தூதரக நிலைக்கு உயர்த்தி, தூதரை நியமிக்கும் சாத்தியம் தற்போது அதிகரித்துள்ளது" என்று வெளிநாட்டு அமைச்சர் திரு. சுவரண்சிங் இன்று நாடாளுமன்றத்தில் தெரிவித்தார்.

இரு நாடுகளுக்கிடையே உறவுகளை அபிவிருத்தி செய்வது சம்பந்தமாக சில குறிப்பான யோசனைகளை சீனுவுக்கு இந்தியா தெரிவித்திருக்கிறது. சீனுவின் பதில் எதிர்பார்க்கப்படுகிறது. சீனுவின் பதிலைப் பொறுத்து மேற்கொண்டு தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும் என்றார் திரு. சுவரண்சிங்.

திரு. வனமாலி பட்நாய்க், திரு. ராம்சகாய் பானர்ஜி ஆகியோரின் கேள்விக்கு பதில் அளிக்கையில் அவர் அவ்வாறு தெரிவித்தார்.

சீனுவுடன் நமது உறவுகளில் சிறிது அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது. சீனுவிலுள்ள சீன அதிகாரிகளும் வெளிநாடுகளிலுள்ள அவர்களுடைய பிரதிநிதிகளும், நமது பிரதிநிதிகளிடம் சகஜமாகவும், நேசமாகவும் நடந்துகொள்கின்றனர் என்றார் திரு. சுவரண்சிங்.

மேலும் அவர் பேசுகையில் கூறியதாவது:—

ஐ. நா.வில் சீனு இடம் பெற்றது குறித்து சீனுவைப் பாராட்டி இந்தியா அனுப்பிய பாராட்டுக் கடிதத்திற்குச் சீனப் பிரதமர் பதில் அனுப்பியிருப்பது, இரு நாடுகளுக்கிடையே உறவுகள் அபிவிருத்தி அடைந்திருப்பதற்கு மற்றொரு உதாரணமாகும் என்றார்.

சீனுவுடன் வர்த்தக, கலாச்சார தொடர்புகளை வளர்த்துக்கொள்ள அரசு நடவடிக்கை எடுத்து வருகிறது. லண்டனில் நடைபெறவிருக்கும் தொழிற் கண்காட்சியில் பங்குகொள்ள இந்தியா உத்தேசித்துள்ளது. புதுடெல்லியில் அடுத்த ஆண்டு நடைபெறவிருக்கும் உலக வர்த்தகக் கண்காட்சியில் பங்குகொள்ளும்படி சீனுவைத் தூண்ட முயன்று வருகிறோம் என்றார்.

அக்சாய்சின் பகுதிபற்றி சீனுவுடன் பேசத் தாம் தயாராயிருப்பதை பிரதமர் கூறியதாக வெளியான செய்திகள் பற்றிக் கேட்டபோது, திரு. சுவரண்சிங் பின்வருமாறு பதிலளித்தார்.

"எல்லைத் தகராறு உள்ள போதிலும் உறவுகளை மாமூல் நிலைப்படுத்திக் கொள்வது பற்றி சீனுவுடன் பேசத் தயாராயிருக்கிறீர்களா என்று பிரதமரிடம் கேட்கப்பட்டது. எல்லைப் பிரச்னை பற்றியும் அவ்வப்போது ஆலோசனை நடத்தலாம் என்று திருமதி இந்திரா காந்தி கூறினார்.

இந்திய—சீன எல்லைத் தகராறு பற்றிய பிரச்னையை ஐ. நா.வில் எழுப்பும் உத்தேசம் இல்லை என்றார். இத்தகைய பிரச்னைகளை இருதரப்பு பேச்சுகள் மூலம் அமைதியாகத் தீர்த்துக் கொள்வது நல்லது என இந்தியா கருதுகிறது என்றார்.

ஐ. நா.வில் சீனப் பிரதிநிதி நிகழ்த்திய முதலாவது சொற்பொழிவில் வங்க தேசப் பிரச்னை பற்றி எதுவும் கூறாதது பற்றி இந்திய அரசு என்ன நினைக்கிறது என்று சுதந்திரா கட்சி உறுப்பினர் ஒருவர் கேட்டபோது "அது பாகிஸ்தான் கவலைப்பட வேண்டிய விஷயமே தவிர, நாம் அல்ல" என்று அமைச்சர் சுவரண்சிங் உடனே பதிலளித்தார்.

## புதுவை அமைச்சரவையில் பிளவு

# தி. மு. க. கோஷ்டி சண்டை பரவுகிறது

சென்னை, நவ. 19—

புதுவை மாநில அமைச்சர் திரு. எஸ். ராமசாமியிடமிருந்து உள்துறை இலாகா அகற்றப் பட்டிருப்பதாக அரசாங்க அறிவிப்பு ஒன்று கூறுகிறது. இனி அவர் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் என்று அழைக்கப்படுவார்.

தன்னிடமிருந்த போலீஸ் இலாகாவை முதலமைச்சர் பரூக் மரைக்காயர் பறித்திருப்பது குறித்து திரு. ராமசாமி ஆத்திரம் அடைந்துள்ளார். இதனால் அவர் சென்னைக்குச் சென்று தி. மு. கழகப் பொதுச் செயலாளர் திரு. இரா. நெடுஞ்செழியனிடம் முறையிட்டுள்ளார். தன்சகாக்களிடம் பரூக் மரைக்காயர் நடந்துகொள்ளும் விதம் பற்றி புதுவை தி. மு. கழகத்தில் ஏற்பட்டிருக்கும் அதிருப்தி குறித்தும் திரு. ராமசாமி முறையிட்டுள்ளார்.

பத்திரிகையாளர்களிடம் திரு. ராமசாமி பேசுகையில் தான் புதுச்சேரியிலில்லாத சமயத்தில் நவ. 17-ம் தேதி மாலையில் போலீஸ் இலாகாவை தன்னிடமிருந்து அகற்றும் உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகக் கூறினார். அவசியமானால் தாம் ஒரு அறிக்கை வெளியிடப் போவதாகவும் அவர் அறிவித்தார்.

## அரசியல் தீர்வு காண ஊதாண்டிற்கு இந்திரா காந்தி அழைப்பு!

புதுடில்லி, நவ. 19—

பங்களாதேஷ் பிரச்சனைக்கு அரசியல் தீர்வு காண ஐ. நா. பொதுகாரியதரிசி ஊதாண்டிற்கு இந்தியப்பிரதமர் திருமதி இந்திராகாந்தி அழைப்பு விடுத்துள்ளார்.

இந்தியப் பாக். எல்லையில் பயங்கர நிலைமை உருவாகியிருப்பதாகவும் கிழக்கு வங்க மக்களது விருப்பத்திற்கு இணங்கத் தீர்வு காண வருமாறும் இந்திராகாந்திகேட்டுக் கொண்டார்.

பாக். ராணுவ ஆட்சியாளர்களும், தேர்ந்தெடுக்கப்பட்ட வங்க தேசப் பிரதிநிதிகளும் சேர்ந்து உட்கார்ந்து பேசி சமாதான முறையில் தீர்வு காண வேண்டும் என்று இந்திரா காந்தி தனது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

போராடிக் கொண்டிருக்கும் பங்களாதேஷ்வீரர்கள்—அவர்களைப் படுகொலை செய்து ஒழித்துக்கட்ட முனைந்து நிற்கும் ராணுவ வெறியர்களுடன் பேச்சு வார்த்தைநடத்தி—அரசியல் தீர்வு காண்பது என்பது எப்படி நடக்கும் என்பதை இந்திரா காந்தி விளக்கவில்லை. போராடும் மக்களின் முதுகில் குத்தும் இந்தக் கைங்கரியத்தைப் புரிய ஊதாண்டைத் துணைக்கு அழைக்கிறார் இந்திரா காந்தி.

### இந்தியாவின் பொறுமை ஜனதிபதி கிரி எச்சரிக்கை

கல்கத்தா, நவ, 18—

பாகிஸ்தானின் அடாத செயல்களின் காரணமாக இந்தியா தன் பொறுமையை இழக்கும் நிலைக்கு வந்து கொண்டிருக்கிறது என்று ஜனதிபதி கிரி கல்கத்தா வானொலியில் பேசுகையில் குறிப்பிட்டார்.

ஆக்கிரமிப்பாளர்கள் உள்ளே நுழைந்தால் சரியான பதிலடி கொடுக்க இந்திய வீரர்கள் தயாராக இருக்கிறார்கள் என்றும் அறிவித்தார்.

பங்களாதேஷ் வீரர்கள் எண்ணற்ற தியாகங்கள் புரிந்து போராடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களது துயரங்களுக்கு சீக்கிரமே ஒரு முடிவு கண்டு அகதிகள் தங்கள் தாயகம் திரும்பும் நாள் சீக்கிரமே வரும் என்றுதான் நம்புவதாக ஜனதிபதி கிரி தெரிவித்தார்.

பங்களாதேசத்திற்கு அங்கீகாரம் வழங்கும் பிரச்சினை தன்னுடைய அரசாங்கத்தின் தீவிர பரிசீலனையில் இருப்பதாக ஜாலவைகுரி என்ற இடத்தில் திரு. கிரி பேசுகையில் குறிப்பிட்டார்.

## அமெரிக்க முதலாளிகளுக்காக வாதாடுகிறார் அமைச்சர் மாதவனுர்!

சென்னை, நவ. 18—

அமெரிக்க நாட்டிற்கு நான் சென்றிருந்தபோது, தமிழ் நாட்டின் சார்பாக நான் பேசிய கருத்துக்குக்கு அங்கு நல்ல வரவேற்பு இருந்தது. என்றும், "அயல் நாட்டுத் தொழில் நுணுக்க உதவியைப் பெறத் தயங்கக்கூடாது, அமெரிக்க ஒத்துழைப்பு இந்திய தேசிய வாழ்க்கை முறையை பாதிக்காமல் அதிக நன்மை அளித்திருக்கிறது." என்றும் தமிழ்நாடு தொழில் அமைச்சர் திரு. மாதவன், கூறினார்.

இங்கு, இந்திய-அமெரிக்க வர்த்தக சபையின் தென்னிந்திய கவுன்சில் மூலம் ஏற்பாடு செய்யப்பட்ட "தென்னிந்தியாவின் தொழில் அபிவிருத்தியில் அமெரிக்க ஒத்துழைப்பின் பங்கு" என்பது பற்றிய கருத்தரங்கை ஆரம்பித்து வைத்து பேசுகையிலேயே மந்திரி மாதவன் அவ்வாறு அமெரிக்காவுக்குப் புகழாரம்சூட்டிப் பேசினார்.

மேலும் அவர் பேசுகையில், தொழிலில் அன்னிய ஒத்துழைப்பை அங்கீகரிப்பதில் செயல் ரீதியான கண்ணோட்டத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றும், சித்தாந்த ரீதியான காரணங்களை முன்னிட்டு அந்நிய முதலீட்டை நிராகரிக்கக் கூடாதென்றும் நாட்டின் நீண்டகால அனுகூலங்களைக் கருத்தில்கொண்டு, அந்நிய ஒத்துழைப்பை அங்கீகரிப்பது சம்பந்தமான நடைமுறைகளைச் சுலபமாக்க வேண்டும் என்றும் மந்திரி மாதவன் உபதேசம் செய்தார்.

பொருளாதாரத்தில் அரசு ஆதிக்க நிலை பெறவேண்டும் என்ற கொள்கை ஏற்பட்டிருப்பது உண்மையே. ஆனால், தனியார் தொழில் துறையில் இந்திய, அந்நிய முதலீடுகளின் அவசியம் அலட்சியம் செய்யப்படவில்லை அவைகளுக்கு இந்திய நாட்டில் உரித்தான மதிப்பு கொடுக்கப்படுகிறது என்றும் கூறி காங்கிரஸ் ஆட்சியின் கொள்கையை விளக்கினார்.

மேலும் பேசுகையில், "இந்தியப் பொருளாதாரத்தில் சமீபத்தில் ஏற்பட்டுள்ள போக்கு பற்றி சில அந்நிய முதலீட்டுக் காரர்கள் அஞ்சுகிறார்கள். உரிமைத் தொகை விகித பில்கள், வரிப்பளு, லாபத்தைச் சொந்த நாடுகளுக்கு அனுப்புவதிலுள்ள சிக்கலான நடைமுறைகள், உடன்பாடுகளை நிறைவேற்றுவதிலுள்ள தாமதம் அவர்களுக்கு அச்சத்தை ஏற்படுத்துகின்றன." என்று அமெரிக்கா முதலாளிகளுக்கு வக்காலத்து வாங்கிப் பேசினர்.

### தாய்லாந்து பார்லிமெண்ட் கலைப்பு அவரச நிலை பிரகடனம்

பாங்காக், நவ. 18—

தாய்லாந்தின் பிரதமரான தானம் கிட்டிகாசோன் பார்லிமெண்ட்டைக் கலைத்துவிட்டதாகவும், அமைச்சரவையையும்கலைத்துவிட்டதாகவும் அரசுக்குச் சொந்தமான தாய்லாந்து வானொலிநிலையம் அறிவித்தது.

நேற்றிரவு தாய்லாந்து முழுவதும் அவசர நிலை பிரகடனம் செய்யப்பட்டது.

அதிகாரங்கள் முழுவதையும் பிரதமர் தலைமையிலுள்ள புரட்சிக் கட்சி ஏற்றதாகவும், நாடு முழுவதும் ராணுவமும் போலீசும் தயார் நிலையில் இருப்பதாகவும் அவ்வானொலிச் செய்தி கூறியது.

# பிரமானந்த ரெட்டி போர்க்கொடி

## கோஷ்டிச் சண்டையில் காரசாரமானகடிதப்போக்குவரத்து

புதுடில்லி நவ 19—

இந்திராகாந்திக்கு எதிராக பிரமானந்தரெட்டி கோஷ்டி செயல்படுவதாக இந்திரா காங்கிரஸ் கட்சியில் வாக்குவாதம் ஏற்பட்டுள்ளது. பிரமானந்த ரெட்டி கோஷ்டியைச் சேர்ந்த மத்திய அமைச்சர் கே வி. ரகுநாத ரெட்டி மீதும் இது சம்பந்தமாக குற்றச்சாட்டு எழுந்துள்ளது.

மூன்று தினங்களுக்கு முன் நடைபெற்ற நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சியின் செயற் குழுக் கூட்டத்தில் "சோஷலிஸ்ட் நடவடிக்கைக்கான காங்கிரஸ் அரங்கு" கட்சிக்குள் கோஷ்டி சண்டையை வளர்ப்பதாக ஒரு உறுப்பினர் குற்றம் சாட்டினார்.

முன்னாள் மத்திய அமைச்சரான பி பார்த்தசாரதி சோஷலிஸ்ட் அரங்கத் தலைவர்கள் இந்த அமைப்பை தங்களுடைய சொந்த அரசியல் நலன்களுக்குப்பயன் படுத்துவதாகக் குற்றம் சாட்டுகிறார். இந்த அமைப்பைப் பயன்படுத்தி மத்திய அமைச்சர் கே.வி.ரகுநாதரெட்டி ஆந்திரத்தில்கோஷ்டிச் சண்டையை வளர்ப்பதாகவும் அவர் திட்டவட்டமான குற்றச்சாட்டு கூறியுள்ளார்.

சோஷலிஸ்ட் அரங்கம் செயல்படும் விதம் குறித்து பிரதமர் இந்திரா காந்தியும் அதிருப்தி தெரிவித்ததாகக் கூறப்படுகிறது.

திரு. பார்த்தசாரதி கூறியவை பிரதம மந்திரியின் கருத்துக்களைப் பிரதிபலிக்கின்றன என்ற எண்ணத்தை நிர்வாகக் குழுக் கூட்டத்தில் பிரதம மந்திரியின் பேச்சு ஏற்படுத்தியுள்ளது.

இந்த நிலைமையில் சோஷலிஸ்ட் அரங்கத்தின் (இந்திரா காங்கிரசின் ஒரு உட்பிரிவு) தலைவரான அர்ஜுன் அரோரா நவ. 17-ல் பிரதம மந்திரிக்கு ஒரு நீண்டகடிதம் எழுதியுள்ளார். அதன்மூலம் பிரதம மந்திரிக்கு எதிராக சோஷலிஸ்ட் அரங்கு செயல்படவில்லை என்று உறுதி கூறியுள்ளார்.

ஆந்திரத்தில் சோஷலிஸ்ட் அரங்கத்துக்குள் சில சந்தர்ப்பவாதிகள் நுழைந்து விட்டதாகவும் அவர்கள் பிரதம மந்திரிக்கு எதிராக சதித்திட்டம் தீட்டுவதாகவும் நிர்வாகக்குழு கூட்டத்தில் திரு. பார்த்தசாரதி குற்றம் சாட்டியுள்ளதாகவும் கூறப்படுகிறது.

அர்ஜுன் அரோரா பிரதமருக்கு எழுதிய கடிதம் ஒற்றுமையை ஏற்படுத்துவதற்குப் பதில் கட்சிக்குள் பிளவை மேலும் வலுக்கச் செய்திருப்பதாகக் கருதப்படுகிறது.

திரு. பார்த்தசாரதி இப்போது பிரதம மந்திரிக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார்.

அதில் திரு. ரகுநாதரெட்டி மீதும், முன்னாள் முதலமைச்சர் பிரமானந்தரெட்டி மீதும் திட்டவட்டமான குற்றச்சாட்டுக்களை கூறியுள்ளார்.

அதில் "காங்கிரஸ் சோஷலிஸ்ட் போர்வையிலுள்ள ஒரு கம்யூனிஸ்ட்" என்று ரகுநாத ரெட்டி மீது புகார் கூறியுள்ளார். அக்கடிதத்தில் திரு. பார்த்தசாரதி மேலும் கூறியிருப்பதாவது:—

"ரகுநாதரெட்டி தன்னை முழுக்க முழுக்க பிரமானந்த ரெட்டி கோஷ்டியில் ஐக்கியப் படுத்திக்கொண்டுள்ளார் மாநில மட்டத்தில்மட்டுமின்றி மத்தியிலும் கோஷ்டி நடவடிக்கைகளை வளர்ப்பதற்குரகுநாத ரெட்டி பிரமானந்த ரெட்டியின் பிரதிநிதியாகச் செயல்படுகிறார்" என்று கூறப்பட்டுள்ளது.

மற்றொரு பெரிய குற்றச் சாட்டையும் ரகுநாத ரெட்டி மீது பார்த்தசாரதி கூறியுள்ளார். கேசி பந்த மீதுஆதாரமற்ற குற்ற சாட்டுகளை சுமத்தும் மனுவில் ஆந்திரத்தைச் சேர்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்களின் கையெழுத்தை வாங்குவதற்கு ரகுநாத ரெட்டி முயன்றுள்ளார் என்பதே அந்தக் குற்றச் சாட்டு.

விஜயவாடாவில் நடைபெற்ற சோஷலிஸ்ட் நடவடிக்கைக்கான காங்கிரஸ் அரங்கத்தின் கூட்டத்தில் உண்மையான சோஷலிஸ்ட்கருத்துள்ள காங்கிரஸ்காரர்கள் கலந்து கொள்ளவில்லை என்றும் ரகுநாத ரெட்டியின் கையாட்கள் தான் அதில் கலந்து கொண்டிருப்பதாகவும் திரு. பார்த்தசாரதி தன்னுடையகடிதத்தில் கூறியுள்ளார்.

# பஸ் போக்குவரத்து நிர்வாகம் யார் கையில்?

## மக்கள்பிரதிநிதிகளுக்கு இடமில்லை

சென்னை; நவ. 15—

நாட்டுடைமையாக்கப்படும் பஸ் கம்பெனிகளை நடத்துவதற்கு மேலும்5போக்குவரத்து கார்ப்பரேஷன்களை அமைக்கப் போவதாக போக்குவரத்து அமைச்சர் திரு ராமச்சந்திரன் பத்திரிகையாளர்களிடம் தெரிவித்தார்.

பல்லவா போக்குவரத்து கார்ப்பரேஷன், பாண்டியன் கார்ப்பரேஷன் ஆகிய இரண்டும் 1972 ஜனவரியிலிருந்து செயல்படத் தொடங்கும் என்று அறிவிக்கப்படுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் ஒரு கார்ப்பரேஷனும், கோவை மாவட்டத்தில் ஒரு கார்ப்பரேஷனும் பிப்ரவரியில் அமைக்கப்படும். சேலம்-தர்மபுரிபகுதியிலும், கன்யாகுமரி மாவட்டத்திலும்,வட. தென்ஆற்காடு மாவட்டங்களிலும் மற்ற மூன்று கார்ப்பரேஷன்கள் விரைவில் அமைக்கப்படும்.

பல்லவா கார்ப்பரேசனுக்கும் பாண்டியன் கார்ப்பரேசனுக்கும் டைரக்டர் போர்டுகளை அரசு நியமித்திருக்கிறது.

இந்த நிறுவனங்களை நடத்துவதற்கான அமைப்புகளில் தொழிலாளர் பிரதிநிதிகளையோ மக்களுடைய பிரதிநிதிகளையோ இடம் பெறச் செய்வதற்கு அரசு தயாராக இல்லை.

போக்கு வரத்துத் துறையில் பல ஆண்டுகளாகப் பணிபுரியும் தொழிலாளர்களில் யாரும் அரசின் கண்ணில் படவில்லை

லஞ்ச ஊழலுக்கும் திறமையின்மைக்கும் பேர்போன அதிகார வர்க்கம் தான் அரசின் கண்ணில் பட்டுள்ளது

நம் நாட்டின் எத்தனையோ பொதுத் துறை நிறுவனங்களை இந்த அதிகார வர்க்கம் பாழடித்திருக்கும் அனுபவத்தைக் கண்டிருந்தும் டைரக்டர் போர்டுகளில் முழுக்க முழுக்க அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தவர்களையே இந்தப் "பாட்டாளி மக்களின்" அரசு இடம் பெறச் செய்துள்ளது.

## கட்சிக் காங்கிரஸ் நிதி

தோழர் ஏ. கே. கோபாலன் எம். பி. அவர்களிடம்

நவம்பர் 8, 9 தேதிகளில் மதுரை மாவட்டம் பெரியகுளம் தாலுகாவிலும், 11-ஆம் தேதி திண்டுக்கல் நகரிலும், 10-ஆம் தேதி திருச்சி மாவட்டத்திலும் சுற்றுப் பிரயாணம் செய்த போது அளிக்கப்பட்ட கட்சி நிதியிலிருந்து கீழ்க்கண்டபடி மாநிலக் குழுவிற்கு கட்சிக் காங்கிரஸ் நிதி அளிக்கப்பட்டது.

| | |
|---|---|
| மதுரை மாவட்டக் குழு | 2,750-00 |
| திருச்சி மாவட்டக் குழு | 550-00 |

வட ஆற்காடு மாவட்ட மாநாட்டை யொட்டி, 14—11—71-ல் குடியாத்தத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில்

தோழர் பி. ராமமூர்த்தி அவர்களிடம்

கட்சிக் காங்கிரஸ் நிதிக்காக அளிக்கப்பட்ட நிதி

வட ஆற்காடு மாவட்டக் குழு 1,002-00

**உயிரைத்திரணமென மதித்து சிறையிலே உரிமைக்குரல் எழுப்பிய தியாகிகள் மறைந்த பூமியிலே!**

**சேலம் மாநகரிலே! 25-28ல் கூடுகிறது தமிழகத்தின் மார்க்சிச-லெனினிசச் செம்படை!**

தீக்கதிர்

# இந்திரா காங்கிரசாரின் கொலை வெறியாட்டம்!

## இந்திராவின் நண்பர்களான வலதுகம்யூனிஸ்ட்களே!
# மறைக்க முடியாத உண்மைகள்

வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு மார்க்சிஸ்டுகள் தான் பிரதான எதிரி. காங்கிரஸ்காரர்கள் அவர்களின் நண்பர்கள்.

இந்த விஷயத்தில்கூட அவர்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் தெரியுமா? கேரளத்தைப் போல, வங்கத்திலும் இந்திரா காங்கிரசுடன் கூட்டு சேர்ந்து எப்படியாவது ஆட்சிபீடத்தில் அமரலாம் என்று கனவு கண்டு கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் உண்மையில் காங்கிரஸ் அரசு அவர்களை எந்த நிலையில் வைத்திருக்கிறது தெரியுமா? எப்படி நடத்துகிறது தெரியுமா?

உதாரணத்திற்கு வலது கம்யூனிஸ்ட் கட்சியின் வங்காள நாளேடான 'கலந்தர்' பத்திரிகை இரண்டு நாட்களில் வெளியிட்ட செய்தியை இங்கு தருகிறோம்.

கலந்தரின் நவம்பர் 7-ம் நாள் இதழ் "போலீஸ் சட்டத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்டனர். காஸ்பா பகுதியில் மட்டும் 8 நாட்களில் ஐந்து தோழர்கள் போலீசாரால் கொலைப்பட்டுள்ளனர்" என்று கூறுகிறது

### போலீஸ் வெறியாட்டம்!

நவம்பர் 5-ம் நாள்; பகல் ஒரு மணி இருக்கும் 'சாதித் நகரில் பெரும்பாலும் எல்லா வீடுகளிலும் ஆட்கள் இருந்தார்கள்.

2வது வார்டுக்கு அருகே பொதுமக்கள் கூடுமிடத்தில் கலந்தரி பத்திரிகை ஒட்டப்பட்டிருந்தது. இரண்டு இளைஞர்கள் அதைப் படித்துக் கொண்டிருந்தார்கள்.

அமைதியான அந்த இடத்தில் திடீரென்று துப்பாக்கி ரவைகள் வெடிக்கும் சத்தம் கேட்டது. இரு இளைஞர்களில் ஒருவன் கீழே விழுந்தான். ஒருவன் ஓடிவிட்டான். அத்துடன் விட்டார்களா? இன்னும் சுட்டுக்கொண்டே இருந்தார்கள்

அலைகளில் இரண்டு துப்பாக்கி ரவைகள், தயாரின் அருகே படுத்திருந்த சிறுமி உமாவின் வயிற்றையும், காலையும் துளைத்தது.

மற்றொரு வீட்டினிலே, தன்னுடைய அறையில் விளையாடிக் கொண்டிருந்த எட்டு ஆண்டுகளே நிரம்பிய பச்சிளம் பாலகனை காயப்படுத்தியது.

துப்பாக்கி வெடிக்கும் சத்தத்தைக்கேட்ட மக்கள் தங்கள் வீடுகளினின்று எட்டிப்பார்த்த போது, துப்பாக்கி சனியன்கள் தங்கள் முகத்திற்குநேராக நீட்டப்பட்டிருந்ததைக் கண்டு பதுங்கினார்கள்.

இன்றுவரை துப்பாக்கிச்சூட்டில் காயமடைந்த, கீழே விழுந்த இளைஞனைப் பற்றி ஒரு தகவலும் இல்லை.

அக்டோபர் 3ம் நாள், "விபேக் நகரிலுள்ள ஜூல் பகுதியில் பார்தா என்றழைக்கப்படும் அஜித்தத்தா, துளசி என்ற இரு இளைஞர்கள் போலீசாரால் படுகொலை செய்யப்பட்டனர்.

இவர்கள் கொலைக்கு போலீசார் கூறும் காரணம் "போலீசுடன் நடந்த கைகலப்பில் இறந்தனர்" என்பது தான்.

ஆனால் உண்மை என்ன தெரியுமா? அக்டோபர் 3ம் நாள் மாலை இளைஞர்களுடன் இன்னும் ஆறுபேரையும் ராஷ்பிகார் தெருவும், மஞ்சேகர் புக்கூர் தெருவும் கூடுமிடத்திற்கு அருகில் போலீசார் கைது செய்தார்கள்.

மறுநாள் காலை படுபாவிகள் பார்தாவையும், துளசியையும் சுட்டுக் கொன்று விட்டனர். மற்ற ஆறு பேரைப் பற்றி இதுவரை ஒரு தகவலும் தெரியவில்லை.

அதே நாளிலே, சாகித் நகரிலே, 'பிரணுப்பௌமிக்' என்ற பதினெட்டு வயது இளைஞனைக் கைது செய்தார்கள். அவன் போலீசாரிடம் பல விஷயங்களைப் பற்றிக் கூறினனும்.

போலீஸ் வெறியர்கள் மறுபடி திரும்பி வந்து 'கஸ்தாகீர்' என்ற பாலகனை அவனுடைய தாயிடமிருந்து பிடுங்கிச் சென்றனர்... ஐயோ! அவனுக்கு வயது பன்னிரண்டுதான்.

இந்த இருவரையுமே அவர்களின் வீடுகளிலிருந்து கைது செய்து கொண்டு போனார்கள் வெறியர்கள் ஐயோ! பாவிகள் திரும்ப அவர்களது பிணத்தைத் தான் திருப்பித் தந்தார்கள். சும்மாவா, துப்பாக்கி ரவைகள் அவர்கள்உடம்பைத் துளைத்திருந்தனவே.

அக்டோபர் 26ம் நாள் கலந்தர் இதழில் வெளிவந்த செய்தியைப் பாருங்கள்.

### இண்டிகேட் எம்.எல்.ஏ. தூண்டுதல்

அக்டோபர் 11ம் நாள், நிரஞ்சன் நாரு என்ற வாலிபன் படுகொலை செய்யப்பட்டான். பலர் காயமடைந்தார்கள். காயமடைந்தோரில் ஆறு விவசாயிகள் இயக்கத் தோழர்கள் இன்றும் மருத்துவ மனையில் இருக்கிறார்கள்.

சாபஸ் தானாவிலுள்ள கார்ஸ்கா மருத்துவ விடுதியிலும், பட்டாம்பூர் மருத்துவ மனையிலும், மிதுனப்பூர் சதார் மருத்துவ நிலையத்திலும் இவர்கள் சிகிச்சை பெற்றுக் கொண்டிருக்கின்றனர்.

இந்திரா காங்கிரஸிலுள்ள பழைய எம்.எல்.ஏ. ஒருவரின் தூண்டுதலின் பேரில் தான் இந்த தாக்குதல் நடந்துள்ளது.

இந்த விவசாய இயக்கத் தோழர்கள் மீது தொடர்ந்து இரண்டு மணி நேரம் தாக்கியிருக்கிறார்கள். காவல் நிலையம் இவ்வளவுக்கும் சம்பவம் நடந்த இடத்திலிருந்து நான்கு மைல் தூரத்தில் தான் உள்ளது.

எனினும் போலீசார் ஐந்து மணி நேரம் கழித்துத்தான் வந்தார்கள். முன்னமேயே வந்து காயமடைந்தோரை விரைவில் மருத்துவ மனைக்கு அனுப்பியிருந்தால், தோழர் ஜானுவின் உயிரைக் காப்பாற்றியிருக்கலாம் என்று வலது கம்யூனிஸ்ட் கட்சி மிதுனப்பூர் மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவர் கூறினார்.

அக்டோபர் 11-ம் நாள் பார்தா காட்டாவில் மட்டும் இம்மாதிரி தாக்குதல்கள் நடக்கவில்லை. ஏழை விவசாயிகளையும், விவசாயத் தொழிலாளர்களையும் நிலத்தைவிட்டு வெளியேற்ற நிலத் திருடர்கள் சலிமாபாத், 'டெப்பார் பாரா', 'சார்காபுகி', 'டான்கர் துன்சோ', பிஜித்பூர்', 'கோபால்பூர்' போன்ற பகுதிகளில் நடத்திய தாக்குதல்களின் ஒரு பகுதியே இது என்று திரு. தாஸ் குறிப்பிட்டார்.

தற்போது-ஜனாதிபதி ஆட்சியின் கீழ்-இந்தப்பழைய இண்டிகேட் எம். எல். ஏ. வெளிப்படையாகவே, விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

—''பீப்பிள்ஸ் டெமாகிரசி''

தமிழாக்கம்: ஆர். ஆர். எம்.

---

# வேலையில்லாதோருக்கு அரசின் பட்டைநாமம்!

நம் நாட்டில் 5 கோடி பேருக்கு வேலையில்லை, பங்களாதேஷ் அகதிகள் பிரச்னை எவ்விதம் இப்போது தலையாய பிரச்னையாக விளங்குகிறதோ அதுபோலவே வேலையில்லாதோர் பிரச்னையும் அவசரமாகத் தீர்க்கப் படவேண்டிய பிரச்னையாகும்.

ஆண்டுதோறும் வேலையில்லாதோர் எண்ணிக்கை பெருகிக் கொண்டே போகிறது. இவர்கள் வாழ்வழியின்றி செத்துமடியும்நிலை ஏற்பட்டால் விரக்தியடைந்து அபாயகரமான வழியில் செல்ல நேரும். வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும் அபாயத்தை விளக்கி ஜனாதிபதி கிரியே நூல் ஒன்றை வெளியிட்டுள்ளார்.

வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கு இந்திரா அரசாங்கம் வகுத்த திட்டமென்ன?

புதிய வரிகள்மூலமும் பற்றுகுறை பட்ஜெட் மூலமும் ரூ. 500 கோடிக்கு புதிய சுமையை மக்கள்மீது ஏற்றியபோதிலும் உள்நாட்டு வேலையில்லாத ''அகதி''களுக்கு வேலை கொடுப்பதற்காக மத்திய அரசு ஒதுக்கிய தொகை ரூ 50 கோடிதான்.

தேர்தலுக்கு முன்பாக பிரதமர் இந்திராகாந்தி ஏழைகளுக்காக வடித்தகண்ணீர் ஆறுகப்பெருகி ஓடிற்று. தன்னுடைய முற்போக்குத் திட்டங்களுக்கு பழமைவாளரிடமிருந்து எதிர்ப்பு வந்ததால் மக்களிடம் புதிய தீர்ப்பு வாங்குவதற்காகவே நாடாளுமன்றத்தைக் கலைத்துவிட்டதாக நாட்டு மக்களுக்கு வானொலிமூலம் அவர் உரையாற்றினார்.

கிராமப்புறங்களில் குடும்பத்தில் ஒரு நபருக்காவது மாதம் ரூ. 100 வருமானம் கிடைக்கச் செய்யப்படும் என்று அ. இ. கா. க. கூட்டத்தில் வாக்குறுதி அளிக்கப்பட்டது.

தேர்தல் முடிந்ததும் பட்ஜெட்டில் புதிய வரிகள் இருந்ததே யொழிய நம்நாட்டின் பிரம்மாண்டமான மனித சக்தியைப் பயன்படுத்துவதற்கான திட்டத்தை காணமுடியவில்லை.

வேலையில்லாதோருக்கு வேலை கொடுப்பதற்காக ''அவசரத் திட்டம்'' என்பதின் பெயரில் ரூ 50 கோடி ஒதுக்கியிருப்பதாக மத்திய அரசு அறிவித்தது. அந்தத் திட்டத்தைக்கூட மத்திய, மாநில அரசுகள் சிரத்தையுடன் அமுலாக்கவில்லை என்பது இப்போது அம்பலமாகியுள்ளது.

இந்த ''அவசரத் திட்டம்'' நொறுங்கிவிட்டதாக மாநிலங்கள் அவையில் ஆளும் காங்கிரஸ் உறுப்பினர்களே குறை கூறியுள்ளனர்

இத்திட்டத்தின்கீழ் எவ்வளவு பணம் செலவிடப்பட்டது என்றும்எத்தனை பேருக்கு வேலைகிடைத்தது என்றும் கேட்டகேள்விக்கு அமைச்சர் ஷெர்கில் பதிலளிக்க முடியாமல்போனதால் எல்லா கட்சிகளையும் சேர்ந்த உறுப்பினர்களும் பரிகாசம் செய்தனர்.

வேலையின்மை பிரச்சினையின் கோரத்தை அரசு உணர்ந்ததாகவே தெரியவில்லை அதனால்தான் ரூ 37 91 கோடி செலவை உள்ளடக்கும் 341 மாவட்டங்களுக்கான திட்டங்களை வகுத்துவிட்டதாகவும் மற்ற மாவட்டங்களுக்கும் விரைவில் திட்டங்கள் வகுக்கப்படும் என்றும் அமைச்சர் பதிலளித்துள்ளார் திட்டம் நிறைவேறுவதில் தாமதத்துக்கான காரணத்தை அவர் விளக்கவில்லை

இந்த ''அவசரத் திட்டத்தை'' மத்திய அரசோ மாநில அரசுகளோ அவசரமாக நிறைவேற்ற முன்வரவில்லை.

இந்தத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமானால் இன்னொரு தேர்தல் வந்தால்தான் முடியும் என்று சில உறுப்பினர்கள் மாநிலங்கள் அவையில் பரிகசித்தனர்.

இந்தத் திட்டம் கிராமங்களில் ரோடு போடுதல், கால்வாய்வெட்டுதல் போன்ற வேலைகளை மேற்கொண்டு குறைந்த ஊதியத்தில் தற்காலிக வேலைகொடுப்பதற்கானதே யாகும். இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவது சம்பந்தமாகக்கூட ஒருசில மாநிலங்களைத் தவிர்த்து எல்லா மாநிலங்களிடமிருந்தும் அறிக்கைகள் வரவில்லை என்று மாநிலங்கள் அவையில் அறிவிப்பதற்கு அமைச்சர் ஷெர்கில் வெட்கப்படவில்லை.

வேலையில்லாதவர்கள் துயரைத் துடைப்பதில் கொஞ்சமாவது அக்கறையிருந்திருந்தால் கடலில் பெருங்காயம் கரைப்பதுபோன்று நாடு முழுவதற்கும் ரூ. 50 கோடி செலவிடும் இந்த அற்பத் திட்டத்தைக்கூட அரசு நிறைவேற்றத் தவறியிருக்க முடியுமா?

---



---

சேலத்தில்

# வலது கம்யூனிஸ்டு தொழிற்சங்கத்துரோகம்

சேலம், நவ 19—

சேலத்தில், பீடித் தொழிலாளர்களுக்குத் துரோகம் செய்துள்ள தலைமையைத் தூக்கி எறிந்துவிட்டு சி. ஐ. டி. யூ. சங்கத்தில் சேருவதாக 16 பீடித் தொழிலாளர்கள் அறிக்கை வெளியிட்டுள்ளனர். அது பற்றிய விவரம் வருமாறு:

சேலத்தில் பீடித் தொழிலாளர்களுக்கென தோழர்கள் எஸ் ரமணி, கே. பாபுனு ஆகியோர் தலைமையில் சேலம் ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்கம் உள்ளது. இது சி. ஐ. டி. யூ. வுடன் இணைந்துள்ளது. வலது கம்யூனிஸ்டுகளான ஜி. சாமுவேல், எச். எம் முஸ்தபா ஆகியோரின் தலைமையில் ஒரு பீடித் தொழிலாளர் சங்கம் உள்ளது இது ஏ. ஐ. டி. யூ. சியின் கீழ் இயங்கி உள்ளது.

### சி. ஐ. டி. யூ. வில் இணைய

இச்சங்கம் 1-டி 30/60 என்ற போனஸ் கேஸ் தொழில் நீதிமன்றத்தில் நடைபெற்று வரும்போது தொழிலாளர்கள் மூலமாகவும் அவர்கள் மூலமாகவும் அக்கேசை வாபஸ் வாங்க முயற்சித்து பயனளிக்காமற் போயிற்று இதனால், இவர்கள் முதலாளிகளின் ஏஜெண்டுகளாக மாறி, வறுமையில் உள்ள அப்பாவித் தொழிலாளர்களிடம் வாபஸ் விண்ணப்பங்களில் கையெழுத்துக்களை வாங்கிக் கொண்டனர்.

இவர்களின் துரோகத்தைக் கண்டுபிடித்த தொழிலாளர்கள், தங்களின் போனஸ் உரிமைக்காகத் தொடர்ந்து போராடிவரும் சேலம் ஐக்கிய பீடித்தொழிலாளர் சங்கத்தில் சேருவதாகவும், தங்களுக்கும் சாமுவேல், முஸ்தபா சங்கத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையென்றும் பெண்தொழிலாளர் உட்பட கீழ்வரும் 16 தொழிலாளர்கள் அறிவித்துள்ளனர்.

உம்மர்கான், மெஹர், மஹபூப்பி, மும்தாஜ், காதர்பி, எஸ்.கே. அன்வர், என் அக்பர், என் சுபான், எஸ் ஐ.வஹாப் பியாரிஜான், எம்.ஏ. காதர் ஜமீலாபேகம், எம் யகீன், சவுகத்அலி, எஸ். சித்தன் ஆகியோர்.

### வலது கம்யூனிஸ்ட் தலைவர் ராஜினமா

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் சேலம் மாவட்டக்குழு உறுப்பினரும், கரூர் வட்ட துணைச் செயலாளரும், பாப்பாரெட்டிபட்டிகிளைச் செயலாளருமான எஸ். ஐ. வஹாப் அக்கட்சியின் தொழிலாளர் துரோகத்தை கண்டித்து, அக்கட்சியில் வகித்து வரும் பதவிகளிலிருந்தும், உறுப்பினர் தகுதியிலிருந்தும் ராஜினமாச் செய்து விட்டார். சி. ஐ. டி. யூ. சங்கத்தில் சேர விருப்பம் தெரிவித்துள்ளார்.

---

# மொரார்ஜிக்கு இப்போது புரியுதா?

புதுடில்லி, நவ. 18—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் ஏ. கே. கோபாலன் பேசுகையில் ''காங்கிரஸ் காரியாலயம், சொத்துக்கள் யாருக்குஎன்பது அடிப்படை பிரச்சினை ஆனால் இந்திரா காங்கிரஸ் கட்சியினர் பழைய காங்கிரஸ் கட்சி அலுவலகத்தைக் கைப்பற்ற நடந்து கொண்ட முறை ''திமிரானது'' என்று நாடாளுமன்றத்தில் கூறினார்.

எதிர்க்கட்சியினர் நீண்ட காலமாகவே தடியடியின் 'சுவை'யை அறிந்து அனுபவித்து வந்து இருக்கின்றனர் ஆனால் இப்போதுதான் மொரார்ஜிக்கு அந்தச் சுவையின் அருமை தெரிந்து இருக்கிறது. ஆதலால் அவர் ஆச்சரியப்படுகிறார், ஆனால் எங்களுக்கு இதில் ஒன்றும் ஆச்சரியம் இல்லை என்று ஏ.கே கோபாலன் குறிப்பிட்டபோது எதிர்க்கட்சி வரிசையில் பலத்த சிரிப்பொலி கிளம்பியது

இன்றைக்கு ஆளும் கட்சிக்கு பெருத்த மெஜாரிட்டி இருக்கிறது எனவே எதிர்கட்சிகளை மதிப்பதில்லை. ஆதலால் இன்றைக்கு உள்ள ஜனநாயகத்தை ''பார்லிமெண்டரி ஜனநாயகம்'' என்று கூறத் தேவையில்லை. எதிர்க்கட்சிகள் அடக்கப்படும் போது என்ன ஜனநாயகம் வாழ்கிறது என்று ஏ. கே. கோபாலன் கேட்டார்

---




# மதுரைப் பள்ளியில் ஓர வஞ்சனை!

ஐயா,

புலவர் ம. கி. சிவசுப்பிரமணியன் 19—7—68 முதல் மதுரைக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் இரண்டாம் நிலைத் தமிழாசிரியராகப் பணியாற்றுகிறார். அவருக்கு முதனிலைத் தமிழாசிரியர் தகுதிகளும், பணிக்காலமும் இருப்பினும், பழைய ஊதிய திட்டத்தின் படியே அடிப்படை ஊதியம் ரூ. 90 வழங்கப்படுகிறது. அவருக்கு வருடாந்திர ஊதிய உயர்வு புதிய ஊதிய விதிப்படி ஊதிய நிலை உயர்வு வழங்கப்பட வேண்டும். அண்மையில் தமிழக அரசு முதனிலைத் தகுதியுடைய 2000 இரண்டாம் நிலைத் தமிழாசிரியர்கட்கு (முதனிலை ஊதியமும் பதவி உயர்வும் (ஜி ஓ. 325-25—2—1971)வழங்கியுள்ளது

மதுரைக் கல்வி மாவட்டத்தில் பதவி உயர்வு அளிக்கப்பட்ட இரண்டாம் நிலைத் தமிழாசிரியர்கள் பட்டியலில் சிவசுப்பிரமணியன் இரண்டாவதாக இருக்கிறார். மதுரைக் கல்லூரிக் குழு நிர்வாகிஅவருக்குரிய ஊதியத்தைப் பெற்றுத் தர முன்வரவில்லை. அதே பள்ளியில் வேறு இரு தமிழ்ப்புலவர்களுக்கு அவர் முதனிலை ஊதியம் பெற்றுத் தந்துள்ளார்.

இத்தகைய பாகுபாட்டைத் தவிர்க்க தமிழக அரசு உடனடி நடவடிக்கை எடுக்கவேண்டும். நிர்வாகியின் ஆணவத்தால் தனியார் பள்ளி ஆசிரியர்கள் படும் அல்லல் அளவிடற்பாலது. எல்லாத் தனியார் பள்ளிகளையும் அரசு மேற்கொள்ளுமானால் ஆசிரியர்களின் அவலநிலை சீர்படும்.

இங்ஙனம்,
எம். ஆர். கணபதி

---

# வறுமையால் தற்கொலை

மேலூர், நவ. 17—

மதுரை மாவட்டம் மேலூர் தாலுகா கொட்டாம்பட்டி சரகம் பட்டூரைச் சேர்ந்த வெள்ளிமலை என்பவர். விஷ மருந்தி தற்கொலை செய்து கொண்டார்.

வறுமை வாட்டியதால் வாழ்க்கையில் சோர்வு ஏற்பட்டதே தற்கொலைக்குக் காரணம்.

---

# மாநிலமே திரண்டிடுக!

★

# மாமதுரை நோக்கிடுக!

## அருமைத்தோழர்களே!

நமது கட்சியின் அகில இந்திய மாநாடு அடுத்துவரும் டிசம்பர் 28 முதல் ஜனவரி 2 வரை ஆகிய ஆறு நாட்களிலும் நடைபெறப் போகிறது!

மதுரை மாநகரில் நடைபெறவிருக்கும் அந்த மாநாட்டை, அனைத்துவித கோலாகலங்களுடனும் நடத்த, மதுரை மாவட்டத்தோழர்கள் களத்தில் இறங்கிவிட்டார்கள்.

மாநாட்டுக்கு இடம் நிச்சயிக்கப் பட்டுவிட்டது. மதுரை தமுக்கம் கலையரங்கத்திலும், அதையொட்டியுள்ள பரந்த மைதானத்திலும் மாநாடு நடத்திக்கொள்ள மாநகராட்சியிடமிருந்து அனுமதி கிடைத்து விட்டது.

அனைத்து மாநிலங்களிலிருந்தும் வரவிருக்கும் பிரதிநிதிகள் தங்குவதற்கும், தங்களுக்குள் விவாதித்துக் கொள்ளுவதற்கும் சகல வசதிகளோடும் கூடிய முகாம்கள் எழுப்பப்பட விருக்கின்றன.

மாநாட்டு வாசல்கள் அனைத்துக்கும் தியாகிகளின் திருப்பெயர்களே சூட்டப்படும்.

### 500 பிரதிநிதிகள் வருகிறார்கள்

மாநாட்டுக்கு முன்னதாகவே, கட்சியின் மத்தியக்கமிட்டி அலுவலகம் மதுரைக்கு வந்துவிடும் மாநாட்டுக்கு அனைத்து மாநிலங்களிலிருந்தும் 500 பிரதிநிதிகள், நமது கட்சியின் அனுபவமிக்க தலைவர்கள்—உழைப்பாளி மக்களின் ஒப்பற்ற தலைவர்கள் வருகிறார்கள்!

காங்கிரஸ் பாசிஸ்ட் ஆட்சியின் இரத்தவெறிக்கு நூற்றுக்கணக்கான ஊழியர்களைப் பலிகொடுத்து—எண்ணற்ற போராட்டங்களில் தியாகத்தழும்புகளை முத்திரையாகப் பெற்று — வெற்றிகிட்டும்வரை போர்க்களத்திலேயே நிற்போம் என வீரகர்ச்சனை புரியும் மேற்கு வங்க கட்சி அனுப்பி வைக்கும் 125 பிரதிநிதிகள் வருகிறார்கள்!

பொங்குமாங்கடலின் போராட்ட அலைகள் பொங்கிக் கொண்டேயிருக்கும் மலைநாடாம் கேரளபூமியிலிருந்தும் 100 பிரதிநிதிகள் வருகிறார்கள்!

மற்றும் பஞ்சாபிலிருந்து—அரியானாவிலிருந்து—அஸ்ஸாமிலிருந்து—டில்லியிருந்து — காஷ்மீரிலிருந்து— உத்திரப்பிரதேசம், மத்தியப்பிரதேசம், குஜராத், மகாராஷ்டிரா

ஆந்திரா, கர்நாடகம்— அனைத்து மாநிலங்களிலிருந்தும் 200-க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் வருகிறார்கள்!

தமிழ்நாட்டிலிருந்து 40 பிரதிநிதிகள்—எத்தனையோ போராட்டங்களில் தியாகத் தழும்புகள், பெற்று—அனுபவ முதிர்ச்சி மிக்க நமது அருமைத் தலைவர்கள் வருகிறார்கள்

### அன்பிற்கினிய தோழர்களே!

அகிலஇந்திய மாநாட்டை நடத்தும்பொறுப்பை 3ஆண்டுகளுக்கு முன்னே கேரளக் கட்சி ஏற்றுக்கொண்டது- வரலாறுகாணா சீரும் சிறப்புடன் நடத்திக்காட்டியது.

இந்தத் தடவை நமது தமிழ்நாட்டுக்கு சீட்டுவிழுந்திருக்கிறது. மதுரை மாநாட்டை தமிழகத்திற்கே உரிய தனிச்சிறப்புடன் நடாத்த செங்கொடி பறக்கும் ஒவ்வொரு ஊரிலிருந்தும் கிராமங்களிலிருந்தும்— அருமைத் தோழர்களே! முழு மூச்சுடன் தயாரிப்பு வேலைகளில் இறங்கிடுக! தேனீக்களைப் போல், சிற்றெறும்புகளைப் போல், சிகப்பு ஆறுகளெனப் புறப்படத் தயாராவீர்!

நிதி வசூல் தீவிரமாகட்டும்! பிரச்சாரவேலைகள் மும்முரமாகட்டும்! ஓய்வுகொள்ள நேரமில்லை! உறுத்தெழுவீர் தோழர்களே!

---

# அடித்துவரும் கொள்ளை போதாதாம்

## மேலும் பிரிட்டிஷ் மூலதனம் இந்தியாவுக்கு வருகிறது

பம்பாய், நவ. 16—

ரிச்சர்டு உட் என்பவர் பிரிட்டிஷ் மந்திரி, அவர் இந்தியாவின் பழைய வைஸ்ராய் லார்டு இர்வினின் மகன். அவர் இப்பொழுது இந்தியாவில் 2 வாரகாலம் சுற்றுப் பயணம் செய்து, அரசாங்க அதிகாரிகளையும் தனிப்பட்ட பெரு முதலாளிகளையும் சந்தித்துப் பேசவிருக்கிறார்.

அவர் தனது வருகையின் நோக்கத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் :-

"இந்தியாவிலும், மற்றுமுள்ள அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளிலும் தனிப்பட்ட முதலாளிகளுக்கு உதவி புரிந்து ஊக்கமூட்ட பிரிட்டிஷ் முதலாளிகள் விரும்புகிறார்கள். பிரிட்டிஷ் அரசாங்கமும்கூட, இப்படிப்பட்ட ஒரு திட்டமே வகுத்திருக்கிறது." — என்று கூறினார்.

ஏகாதிபத்திய அரசுகளும், ஏகாதிபத்திய முதலாளிகளும் இந்தியாவில் முதலீடு செய்து, இதுவரை கொள்ளையடித்தது போதாதென்று, மேலும் மேலும் தொடர்ந்து கூடுதலாகக் கொள்ளையடிக்க முனைந்திருக்கிறார்கள்.

சமதர்மம் பேசும் இந்திரா சர்க்காரும், இந்தக்கொள்ளைக் கூட்டத்துக்கு கதவைத்திறந்து வைத்திருக்கிறது.

## கடத்தல் தங்கத்தில் 10-ல் 9 பிடிபடுவதில்லை

### மத்திய அதிகாரி தகவல்

சென்னை, நவ. 18—

மத்திய அதிகாரி பி. வி. குமார், இங்கு 9—11—71ல் நடந்த ரோட்டரி கிளப் கூட்டத்தில் பேசுகையில், தங்கக் கள்ளக் கடத்தல் பற்றிக் குறிப்பிட்டார்.

கடத்தல் தங்கசம்பவங்களில் பத்துக்கு ஒன்பது பிடிபடுவதில்லைஎன்று கூறினார்.

குறைந்தபட்சம் ரூ 50கோடி பெறுமான தங்கமும், சுமார் ரூ. 200 கோடி பெறுமான இதர பண்டங்களும் இந்தியாவுக்குள் கடத்தப்படுகின்றன என்றும் குறிப்பிட்டார்.

மத்திய தொழில் அமைச்சருக்கு

# ஏ. கே. ஜி. கடிதம்

புதுடில்லி, நவ. 17—

திருச்சியிலுள்ள துப்பாக்கி தொழிற்சாலையில் முழு உற்பத்தி செய்யாமல் யந்திரங்கள் முடங்கிக்கிடப்பதை அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டுவரவும் முழு உற்பத்தி செய்யக் கோரியும் மத்திய தொழிலமைச்சர் மொய்னல்ஹக் சௌதிரிக்கு நாடாளுமன்ற எதிர்க்கட்சித் தலைவரான தோழர் ஏ. கே. கோபாலன் கீழ்வரும் கடிதத்தை எழுதியுள்ளார்.

பொதுத்துறை நிறுவனங்களில் முடங்கிக்கிடக்கும் யந்திரங்களை முழுமையாக உபயோகிக்க சில உடனடி நடவடிக்கைகளை எடுக்க அரசாங்கம் தீர்மானித்திருப்பதாக பத்திரிகைகளில் செய்தி வெளியாகியுள்ளது. உங்களுடைய உடனடியான தீவிரப் பரிசீலனைக்கு கீழ்வரும் விஷயத்தைக் கொண்டுவர விரும்புகிறேன்.

தமிழ்நாட்டில், திருச்சியில் பொதுத்துறையிலுள்ள சிறு ரக ஆயுதத் தொழிற்சாலையில் ரூ 5 கோடி மதிப்புள்ள யந்திரங்கள் முழு உற்பத்தியில் ஈடுபடுத்தப்படாமல் முடங்கிக்கிடப்பதாக நான் அறிகிறேன். இந்த நெருக்கடியான நேரத்தில் இந்தத் தொழிற்சாலையில் முழு உற்பத்தி செய்வதற்கு உடனடி நடவடிக்கை எடுக்க வேண்டியதின் அவசியத்தை விளக்கவேண்டிய அவசியமில்லை. அவ்வாறு செய்தால் வேலை வாய்ப்புகளை அபிவிருத்தி செய்ய உதவுவதுடன் மட்டுமின்றி பாதுகாப்புத் தேவைகளையும் சரிக்கட்ட முடியும்.

சில தினங்களுக்குமுன் இந்த தொழிற்சாலைக்குச் செல்லும் வாய்ப்புக்கிடைத்தது. வேலை நிலைமைகளை அப்போது அறிந்தேன். ஒவர்டைம் அலவன்ஸ் கொடுக்காமலேயே தொழிலாளர்களுக்குக் கட்டாய ஒவர்டைம் வேலை கொடுக்கப்படுவதாக என்னிடம் கூறப்பட்டது. நிர்வாகத்தின் இந்த நடவடிக்கையை நீங்கள் ஒப்புக்கொள்ள மாட்டீர்கள் என்று நம்புகிறேன். இதைப் பற்றி விசாரிப்பீர்கள் என்றும் நம்புகிறேன்.

இது சம்பந்தமாகத் தேவையான நடவடிக்கைகளை எடுக்குமாறும் விவரம் தருமாறும் கேட்டுக்கொள்கிறேன்.

## ஜாப். அமைச்சர் ராஜிநாமா

டோக்கியோ, நவ 18—

ஜப்பானிய அமைச்சர்களில் ஒருவரும், விஞ்ஞான, தொழில் நுட்ப அமைப்பின் இயக்குனருமான ஹிராய் சுமியின் ராஜினாமாவை பிரதம மந்திரி சாடா ஏற்றுக்கொண்டார்.

கடந்த வியாழனன்று கவாஸ்கி நகரத்தில் ஏற்பட்ட நிலச் சரிவில் 15 பேர் கொல்லப்பட்டதை படுத்து அமைச்சர் ராஜினாமா செய்ய வேண்டும்மென்று பொது மக்கள் கிளர்ச்சி நடத்தினர்.

நிலஆராய்ச்சி பற்றி நடத்தப்பட்ட ஒரு சோதனையின் விளைவாகவே நிலச் சரிவு ஏற்பட்டது என்றும் இதற்கு அமைச்சர் பொறுப்பேற்க வேண்டும் என்றும் மக்கள் கிளர்ச்சி செய்தனர்

# மேற்கு வங்கத்தில் பாசிஸ்ட் வெறியாட்டத்தை நிறுத்துக!

## பிரதம மந்திரிக்கு நாடாளுமன்ற உறுப்பினர்கள் பகிரங்கக் கடிதம்!

கல்கத்தா, நவ 18—

மேற்கு வங்கத்தில் குண்டர்கள், மத்திய ரிசர்வ் போலீஸ் ஆட்சிதான் நடைபெறுகிறது. மக்கள்மீது பாசிஸ்ட் போக்கிலான தாக்குதல் பற்றி அதிகாரிகளிடம் முறையிட்டால் எந்தப் பலனும் கிட்டவில்லை. இந் நிலையில் ஜாதவபூர் பகுதிக்கு நேரில் சென்று மக்களிடம் விசாரித்தறிந்த ஆதாரபூர்வமான உண்மைகளை நாடாளுமன்ற உறுப்பினர்கள் மூவரும் தொழிற்சங்கத் தலைவர்கள் இருவரும் பிரதம மந்திரிக்கு அக்டோபர் 18-ம் தேதி எழுதிய கடிதத்தை இங்கு பிரசுரிக்கின்றோம்.

அன்பான பிரதம மந்திரிக்கு,

மேற்கு வங்கத்தில் ஜனநாயக இயக்கத்தின் மீது மட்டுமின்றி மக்களின் அமைதியான வாழ்க்கை மீதே போலீஸ், சி. ஆர். பி. (மத்திய ரிசர்வ் போலீஸ்) உதவியுடன் குண்டர்கள் தாக்குதல் தொடுத்துள்ளனர்.

மேற்கு வங்கத்தில் ஜனாதிபதி ஆட்சியின் புதிய அம்சம் இதுவே. போலீசும் குண்டர்களும் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பு நல்குகின்றனர். கீழே கையொப்பமிட்டிருக்கும் நாங்கள் 24 பர்காணு மாவட்டத்தில் ஜாதவ்பூர் பகுதியிலுள்ள கட்ஜு நகர் காலனி, ராஜேந்திரபிரசாத் காலனி, ஜெயா எஞ்சினியரிங் தொழிலாளர் குடியிருப்பு (உஷாநகர்) ஆகியவற்றிற்கு 1971 அக்டோபர் 16-ம்தேதி சென்றிருந்தோம்.

மேற்கூறப்பட்டிருக்கும் காலனிகளையும் விக்ரம் நகர் காலனி பொத்தார்நகர் 2வது காலனி ஆகியவற்றையும் ஒரு பெரியகுளம் பிரிக்கிறது. இவற்றிற்கிடையேயுள்ள தூரம் 75 கெஜ தூரத்திலிருந்து 150 கெஜம் வரை இருக்கும் மேற்கூறப்பட்டிருக்கும். காலனிகளிலுள்ள ஆட்களையும் வீடுகளையும் நோக்கி குளத்தின் இன்னொரு பக்கத்திலிருந்து குண்டர்கள் சுட்டு வருகிறார்கள். அந்தக் குண்டர்கள் உட்காரும் நாற்காலிகளும், துப்பாக்கிகளை வைக்க உபயோகிக்கும் மேஜைகளும் எங்களுக்குக் காட்டப்பட்டன.

### குண்டர்களுக்கு போலீஸ் பாதுகாப்பு

குண்டர்கள்தளம் அமைத்து இயங்கும் இடத்தின் இரு புறமும் சி. ஆர். பி. நிலையங்கள் பாதுகாப்பாக அமைந்துள்ளன. மத்திய ரிசர்வ் போலீஸ் படையின் கண் முன்பே குண்டர்கள் சுடுகின்றனர். மத்திய ரிசர்வ் போலீஸ் படையினர் எவ்விதம் குண்டர்களுக்குத் துப்பாக்கிகளும் ரவைகளும் தருகின்றனர் என்பதை மக்களிடம் நாங்கள் விசாரித்தறிந்தோம்

கட்ஜு நகர் காலனியில் கீழ்க்கண்டவர்களை நாங்கள் விசாரித்தோம்:-

நிரேன் ஜித்ராய்
தபால் தத்தா
உபேந்திரா சர்க்கார்
திருமதி நிர்மலாதத்தா
,, ஹெனராணிதத்தா
,, ஜோட்ஜ் நராணிதார்
,, பிரபுல்லா தத்தாராய்
,, சக்கிராணி மஜூம்தார்
,, மாயாதாஸ்
,, அராதிதாஸ்
,, கனக்ராய் சௌதிரி
,, பானிபிரபாபௌமிக்
,, பிஜுபானி நஸ்கார்

### பெண்கள் கூறிய சோக நிகழ்ச்சிகள்

மேற்கூறியஉண்மைகளை அவர்கள் உறுதிப்படுத்தினர். அவர்கள் ஒவ்வொருவரும் கூறியதும் பொருத்தமாக இருந்தது. குண்டர்கள் கொன்று விடுவார்களோ என்று பயந்து திருமதி பிரபுல்லா தத்தா ராயின் மகள் மறைந்து வாழ்வதாகவும் நாங்கள் அறிந்தோம். குண்டர்களுக்கு எதிராக ஜாதவ்பூர் போலீஸ் நிலையத்தில் கொடுத்த புகார் மனு ஏற்கப்படவில்லையென்று திருமதி சச்சிராணி மஜூம்தார் கூறினார். அக். 14-ம் தேதி சி. ஆர். பி. துணையுடன் குண்டர்கள் தன் வீட்டுக்குள் புகுந்ததாக திருமதி மாயாதாஸ் கூறினார். அந்தக் குண்டர்களில் ஒருவரான ரத்தனை அவர் அடையாளம் கூறினார். தன் வீட்டை நோக்கி குண்டர்கள் சுட்டுக் கொண்டேயிருந்ததால் வீட்டைக் காலி செய்துவிட்டு போய்விட்டதாக திருமதி பானிபிரபா பௌமிக் கூறினார். குண்டர்கள் பயத்தின் காரணமாக விக்ரம்கார் காலனியிலுள்ள, பள்ளிக்கு கட்ஜு நகர், ராஜேந்திர பிரசாத் காலனி, ஜெயா எஞ்சினியரிங் தொழிலாளர் குடியிருப்பைச் சேர்ந்த 150-லிருந்து 200 பிள்ளைகள் பள்ளிக்கு வரவில்லை என்று திரு தபாஸ் தத்தா புகார் கூறினார் போதிய பாதுகாப்பு செய்யாவிட்டால் அந்தப் பிள்ளைகள் உயர் செகண்டரி தேர்வு எழுத முடியாது.

பின்னர் நாங்கள் ராஜேந்திர பிரசாத் காலனிக்கு சென்று கீழ்க்கண்டவர்களை விசாரித்தோம்.

திரு மகன்லால் பகதூர், திருமதிகள் சாந்திலால் சென், பருல்ராய் அராதிகயன், கல்யாணிதாஸ் மிராணிசந்தா, புஷ்பராணி தேஷ்ராய். பசுதாஸ், பிமல்ராணிதாஸ், பிஜு பாணிதாஸ், கமலாபாலா தாஸ், உஷாராணிதாஸ் மிரா தாஸ், ராணுபாலாதாஸ் சாருலதாதாஸ், திருவாளர்கள் நிர்மல்போஸ், ரஜ்சித் குமார் சின்கா, தலூல் விதேப்ராய், ஜூபன்தாஸ், நிர்மல் ராய், ராசாமாய் முல்லிக்ரபீன்தாஸ்.

### படுகொலை

மேற் கூறியவர்கள் காலனிக்குள் சி. ஆர். பி. உதவியுடன் காலிகள் புகுந்து அராஜகம் புரிகின்றனர். 1971 அக்டோபர் 6-ம்தேதி காலையில் காலனிக்குள்புகுந்து துப்பாக்கி முதலிய பயங்கர ஆயுதங்களுடன் குண்டர்கள் தாக்கிய போது அஜித்போஸ் கொல்லப்பட்டார். தலூல் சந்திரதேப் ராய் தாக்குதலின்போது காயமடைந்தார்.

குண்டர்களோ சி. ஆர். பியோ அல்லது இருவரும் சேர்ந்தோ காலனியைத் தாக்காத நாளே இல்லையென்று அவர்கள் கூறினர். அக். 15-ம் தேதி சி. ஆர். பி. குண்டர்கள் கூட்டுத் தாக்குதல் நடைபெற்றது. நீதிமன்ற வழக்கில் தப்பியோடியிருக்கும் நிகில் தலைமையில் இத்தாக்குதல் நடைபெற்றது அரசாங்க அச்சகஊழியரான மதிசிலலைக் கொலை செய்தபின் நிகில் தலைமறைவாகி யிருப்பதாக் கூறப்படுகிறது. எனினும் சி. ஆர். பி. உதவியுடன் அமைதியான மக்கள் மீது தாக்குதல் தொடுப்பதிலிருந்து அவன் தடுக்கப்படவில்லை.

உஷாநகரைச் சேர்ந்த கீழ்க்கண்டவர்களையும் நாங்கள் விசாரித்தோம்.

ஜெய் எஞ்சினியரிங் தொழிலாளர் சங்க பொதுச் செயலாளர் அரிதாஸ் மலேகர், தலைவர் ராமாயன் பாண்டே உஷா தையல் மெஷின் தொழிற்சாலையின் தொழிலாளர் சங்கத்தின் துணைச் செயலாளர் பிலேப் முகர்ஜி, நிர்வாகக் குழு உறுப்பினர்கள் அடின் மித்ரா, நிரேஜ்நாத் சர்க்கார்! ரபின் சௌத்ரி, சங்கத்தின் தீவிர ஊழியர்கள் சமீர்கங்குலி, சமீர் சர்க்கார், கல்கத்தா நகரசபை உறுப்பினர் ராமன் சென்குப்தா, உஷா நகர் சர்வோதய சமாஜ்

(4-ஆம் பக்கம் பார்க்க)

## விவசாய சங்க திறப்பு விழா

மீஞ்சூர், நவ. 17—

பொன்னேரி வட்டம் சிமாவரம் கிராம விவசாயிகள் சங்க திறப்பு விழாப் பொதுக்கூட்டம் மிக்க சிறப்பாக நடைபெற்றது.

விழாவிற்கு சங்க தலைவர் தோழர் ஏ. பாப்பைய நாயுடு தலைமைவகித்தார். செங்கை மாவட்ட விவசாயிகள் சங்க செயலாளர் தோழர் சி. கே. மாணிக்கம் செங்கொடியை ஏற்றிவைத்தார்.

# யாகியா திருந்துவாராம்

## அகதிகள் திரும்ப முடியுமாம்

### கூறுகிறார் ஜனாதிபதி கிரி

கல்யாணி (நாடியா மாவட்டம்), நவ. 18—

பங்களாதேஷ் அகதிகள் கௌரவத்துடனும் பாதுகாப்புடனும் விரைவில் தாயகம் திரும்பும் முறையில் ஒரு அரசியல் தீர்வு காண்பதற்கு இந்திய அனைத்தையும் செய்யும் என்று ஜனாதிபதி கிரி உறுதியளித்தார்.

இங்குள்ள அகதிகள் முகாம் களிலும் அகேஷ்பூரிலுள்ள அகதிகள் முகாமிலும் நடந்த கூட்டங்களில் ஜனாதிபதி கிரி பேசினார்.

பிரதமர் இந்திராகாந்தி சமீபத்தில்சுற்றுபிரயாணம்செய்த நாடுகளிலும் பங்களாதேஷ் நிலைமையைப் பற்றி அந்நாடுகளின் மக்கள் அறிய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது என்றும் இதனால் யாகியாகான் நிலையில் மாறுதல் ஏற்பட்டு பங்களாதேஷ் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பிரதிநிதிகளுடன் அவர் உடன்பாட்டுக்கு வருவார் என்று நம்புவதாகவும் ஜனாதிபதி கிரி கூறினார்.

அகதிகள் இந்திய நாட்டில் தற்காலிகமாக தங்கியிருக்கும் போது அவர்களுடைய தயரத் துடைப்பதற்கு இந்திய மக்கள் எந்தத் தியாகத்தையும் செய்வார்கள் என்றும் அவர் உறுதி கூறினார்.

## திருச்செந்தூரில் மின் ஊழியர் ஊர்வலம்

திருச்செந்தூர், நவ. 17—

போனஸ் உயர்வு கோரியும் மற்ற கோரிக்கைகளுக்காகவும் திருச்செந்தூரில் மின் ஊழியர் சங்க சார்பில் ஊர்வலமும் கூட்டமும் நடைபெற்றது.

கூட்டத்துக்கு இனதுல்லா தலைமை வகித்தார்.

சாத்தான்குளத்திலும் ராஜாமணி தலைமையில் கூட்டம் நடைபெற்றது.

## கோவில்பட்டியில் 300 ஆசிரியர்கள் ஊர்வலம்!

கோவில்பட்டி, நவ. 16—

பூவலிங்கம் செட்டியார் இளம் ஆதாரப்பள்ளியின் நிர்வாகி தனக்கு வேண்டியவரை தலைமைஆசிரியராகக்கொண்டு வரவேண்டும் என்பதற்காக 10 வருடம் தலைமை ஆசிரியையாக இருந்த திருமதி ஏ இராமலட்சுமி அம்மாளை வெளியேற்றியுள்ளார். இதை எதிர்த்து நவம்பர் 14ம் ஆசிரியர் கூட்டணியைச்சேர்ந்த 300 ஆசிரியர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர். இதில் 75 ஆசிரியைகளும் கலந்துகொண்டது குறிப்பிடத்தக்கது.

திருமதி இராமலட்சுமி அம்மாள் ராஜினாமா செய்ய மறுத்ததால் அவரை பள்ளி நிர்வாகி சஸ்பெண்ட் செய்துள்ளதாக ஆசிரியர் கூட்டணி வெளியிட்டுள்ள துண்டு பிரசுரம் கூறுகிறது.

காந்தி மைதானத்திலிருந்து புறப்பட்டு முக்கிய வீதிகளில் சென்றது.

பின்னர் மூப்பனார் பேட்டையில் கூட்டம் நடைபெற்றது. முத்துச்சாமி தலைமை வகித்தார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச்சேர்ந்த எஸ். வள்ளிநாயகம் எம். சி, வலது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த எஸ். அழகர்சாமி எம்.எல்.ஏ. இந்திரா காங்கிரசைச் சேர்ந்த குமாரசாமித் தேவர் மற்றும் பலர் பேசினர்.



# மார்க்சிஸ்ட் உறுப்பினரை போலீஸ் கையாளாகும்படி மிரட்டல்!

## குளத்தூர் போலீஸ் அதிகாரியின் இழிசெயல்!

குளத்தூர் நவ 18—

திருச்சி மாவட்டத்தில் போலீசார் ஒரு தோழரை போலீஸ்ஏஜெண்டாக—உளவாளியாக்க முயற்சி செய்துள்ளனர். இது பற்றிய விபரம் வருமாறு:-

குளத்தூர் தாலுகாவில் நர்த்தமலையில் ஆர். நாகராஜன் என்பவர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர் கல்லூரியில் பயின்றவர். ஆசிரியப் பயிற்சி முடித்தவர் கட்சியின் பரீட்சார்த்த உறுப்பினர்.

இவரை கடந்த நவ. 9ந்தேதி மாலை 6 மணியளவில் போலீஸ் அதிகாரிகளும், மப்டி உடையில் போலீசாரும் 5டாக்கிகள் ஒரு ஜீப், இரண்டு லாரிகளில் நர்த்தமலைக்கு வந்து தோழர் நாகராசனைத் தேடியுள்ளனர். ஆனால் அவர்வீட்டில் இல்லாததால் அவரது வீட்டினுள் அத்துமீறி நுழைந்து அவரது அண்ணனை மிரட்டிபீரோவைத் திறக்கச் செய்தனர். திறந்து அதனுள்ளிருந்த, திருச்சி மாவட்ட மாநாட்டுக்குச்சென்றிருந்த நாகராசனின் பிரதிநிதி அடையாளக் கார்டையும், மாநாட்டு அறிக்கையையும் எடுத்துக் கொண்டனராம்.

பின்னர்தோழர் நாகராசன் திருச்சியில் உள்ள உறவினர் வீட்டுக்குச் சென்றுள்ளார் அறிந்து, அங்கு சென்று அவரை கைதுசெய்துகொண்டு சென்றனராம்.

### உமாநாத் தலையீடு

இத்தகவல் அறிந்தவுடன் தோழர் ஆர். உமாநாத், டெலிபோன்மூலம் "காரணமில்லாமல் கைது செய்தது சரியல்ல; உடனே விடுதலை செய்யுங்கள். அல்லது மாஜிஸ்திரேட் முன்பு ஆஜர் படுத்துங்கள் அவரை ஜாமீனில் எடுக்கவேண்டும்" என்று சொல்லவே அவரை வெளியே விட்டுவிட்டனர்.

தோழர் நாகராசனைப் பிடித்துச் சென்ற போலீசார் பல்வேறு கேள்விகளைக் கேட்டுள்ளனர் இறுதியில், அவருக்குத் தேவையான அளவுக்கு மாதச்சம்பளம் தருவதாகவும், நல்ல வேலை ஒன்றும் வாங்கித் தருவதாகவும், தங்களுக்கு உளவாளியாக இருந்து கட்சியின் தகவல்களையும் இரகசியங்களையும் கூறும்படியும் சொன்னார்களாம்.

உடனே தோழர் நாகராசன் நான் உங்களிடமிருந்து எவ்வித உதவியும் எதிர் பார்க்கவில்லை." என்று பதில்கூறவே, உன்னைப் போலீசார் கண்காணிப்பார்கள் ஜாக்கிரதை' என்று மிரட்டி அனுப்பிட்டார்களாம்

### பொய்ச் செய்தி

இவ்வாறு தாஜா செய்தும், பணம்கொடுப்பதாக ஆசை காட்டியும், மிரட்டியும் தங்களுக்கு ஆள் பிடிக்கும் முயற்சியில் இறங்கி போலீசார் தோல்வி படைந்தனர். உண்மை இவ்வாறு இருக்க மறுநாள் செய்தித்தாள்களிலும் 11-ந்தேதி வானொலியிலும் முக்கனுமலைப் பட்டியில் மாவோ பிரசுரக்கட்டு கிடைத்ததாகவும், மார்க்சிஸ்ட் ஆதரவாளர் நாகராஜன் கைது செய்யப்பட்டார் என்றும் உண்மைக்கு மாறான செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

# எல்லைப்பகுதிக்கு அமெரிக்க கமிஷன் வருவதற்கு எதிர்ப்பு!

## மாநிலங்கள் அவையில் விவாதம்

புதுடில்லி, நவ. 18—

பங்களாதேஷ் அகதிகள் பிரச்சனையை ஆராய்வதின் பெயரில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் அனுப்பப்படும் நிக்சன் கமிஷன் பற்றி மாநிலங்கள் அவையில் நேற்று காரசாரமான வாதம் எழுந்தது.

நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சியின் செயற் குழுக் கூட்டத்தில் நவ. 16ம் நாள் பிரதமர் இந்திரா பேசுகையில்தான் இப்படியொரு கமிட்டி எல்லைப் பகுதிக்கு போவதைப் பற்றிய செய்தியே வெளியில் தெரிய வந்தது பங்களாதேஷ் பிரச்னையின் மூலகாரணத்தை ஆராயத் தயாராக இருந்தால் இந்த கமிஷன் வருவதைப் பற்றி ஆட்சேபணையில்லை என்று பிரதம மந்திரி இந்திரா அப்போது குறிப்பிட்டார்.

இந்தியாவையும் பாகிஸ்தானையும் ஒரே நிலையில் வைத்துப் பார்க்கும் அமெரிக்க அரசின் அணுகு முறையை மாநிலங்கள் அவையில் எதிர்க்கட்சித் தலைவர்கள் கடுமையாகத் தாக்கினர். அமெரிக்க கமிஷன் வரும் நோக்கத்தைத் தெளிவுப் படுத்த வேண்டும் என்றும் அவர்கள் வற்புறுத்தினர்.

### அமெரிக்க சால்ஜாப்பு

எல்லைப் பகுதிக்கு அனுப்பப்படும் உத்தேச கமிஷன் அகதிகள் நிவாரணப் பணியை ஆராய்வதற்கான ஒரு ஆலோசனைக் குழுதான் என்று அமெரிக்க வட்டாரங்கள் விளக்கம் தந்தன.

கடந்த ஆகஸ்டில் ஜனதிபதி நிக்சன் தெற்கு ஆசியாவில் நிவாரணப் பணியை ஆராய்வதற்காக அமைத்த குழுவின் ஒரு உட்குழுதான் இது என்றும் அவர்கள் கூறினர். அமெரிக்க செஞ்சிலுவைச் சங்கத்தையும் இது போன்ற சேவா ஸ்தாபனங்களையும் சேர்ந்தவர்களே இதில் இடம் பெறுவர் என்றும் அமெரிக்க வட்டாரங்கள் கூறின. அரசியல் விஷயங்களை இந்தக் கமிஷன் விவாதிக்காது என்றும் கூறப்பட்டது.

இந்த விளக்கத்தை மாநிலங்கள் அவையில் இடது சாரிக் கட்சிகளின் உறுப்பினர்கள் அப்படியே நம்பத் தயாராகவில்லை. ஏதாவது ஒரு விதத்தில் இந்தக் கமிஷனின் உறுப்பினர்கள் அரசியல் நடவடிக்கையில் ஈடுபடுவர் என்று அவர்கள் சந்தேகம் தெரிவித்தனர்.

இந்தக் கமிஷன் வருவதைப் பற்றி அதிகாரப்பூர்வமான முறையில் அறிவிக்கப்படும் வரை இதுபற்றி கருத்தறிவிப்பதற்கு அரசு வட்டாரங்கள் மறுத்தன.

### புதிய கோளம் கண்டு பிடிப்பு

இலண்டன், நவ. 18—

புதியகோளம் (கிரஹம்) ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. புதன் கிரஹத்திற்கும் சூரியன் கிரஹத்திற்கும் இடையே உள்ள இக் கோளத்தை கேம்பிரிட்ஜ் வின்வெளி ஆராய்ச்சியாளர்களும், வாசிங்டன் வானிலை ஆய்வுக்கூடமும் கண்டு பிடித்துள்ளது என்று பத்திரிக்கைத் தகவல் கூறுகிறது.

# அன்னிய மூலதனம் ரூ. 1298 கோடி

## இன்னும் வருவதற்கு ஏற்பாடு செய்யுமாம் இந்திய அரசு!

### அறிவிக்கிறார் சவாண்

புதுடில்லி, நவ 16

அன்னிய முதலீடுகள் இந்தியாவுக்குள் அதிகமாக வருவதற்கு, என்னென்ன பாதுகாப்புகளும் ஊக்குவிப்புகளும் அளிக்க வேண்டுமோ, அத்தனையும் அளிக்க வேண்டுமென்பதுதான் இந்திய சர்க்காரின் கொள்கையாகும் என்று மத்திய நிதியமைச்சர் சவாண் இன்று ராஜ்ய சபையில் அறிவித்தார்.

### அதிகரிக்கிறது

அன்னிய முதலீடு குறைந்து கொண்டே வருகிறதே- அந்த நிலைமையை மாற்றி கூடுதலாக வருவதற்குப் பொதுவான முறையில், அன்னிய முதலாளிகளுக்கு நம்பிக்கை ஊட்டக்கூடிய சலுகைகளை அளிப்பீர்களா என்று சீத்தாராம் கேசரி என்ற காங்கிரஸ் உறுப்பினர் கேட்டார்.

அதற்கு சவாண் பதில் அளிக்கையில், "அன்னிய முதலீடு குறைந்து வருவதாகச் சொல்லுவதெல்லாம் தவறு; கூடித்தான் வருகிறது.

1963 மார்ச் மாதத்திலே இந்தியாவில் இருந்த அன்னிய மூலதனம் ரூ. 694 கோடிதான்!

ஆனால், அது 1971 மார்ச்சிலே ரூ. 1298 கோடியாக அதிகரித்துள்ளது. அதாவது ரூ. 600 கோடிக்கு மேல் அதிகரித்துள்ளது" என்று புள்ளி விபரம் கொடுத்தார்.

### லாபக் கொள்ளை

லாபம் என்ற வகையிலே அன்னிய முதலாளிகள் அள்ளிக்கொண்டு போவது எவ்வளவு என்ற புள்ளி விபரத்தையும் சவாண் கூறினார்.

அதாவது, 1967-68 ம் ஆண்டிலே ரூ. 15 கோடியே 90 லட்சம் லாபம் எடுத்தார்கள்.

1969-70 ம் ஆண்டிலே ரூ. 12 கோடி லாபம் எடுத்தார்கள்.

### டிவிடெண்டு கொள்ளை

டிவிடெண்டு என்ற வகையிலே, 1967 - 68 ம் ஆண்டிலே ரூ. 32 கோடியே 70 லட்சம் எடுத்துச் சென்றார்கள். அது, 1969 - 70 ம் ஆண்டிலே ரூ. 31 கோடியே 40 லட்சம் எடுத்துச்சென்றார்கள் என்றும் சவாண் கூறினார்.

# கண்ணோட்டம்

## மாண்புமிகு மந்திரி பேசுகிறார்! கேளுங்கள்!

தூங்கிக் கொண்டிருப்பவனை எழுப்பலாம்! தூங்குவதுபோல் பாவனை பண்ணுபவனை எழுப்ப முடியாது தெரியாமல் தவறு செய்தால், சொன்னால் திருந்துவான்! தெரிந்தே தவறு செய்பவன் சொன்னாலும் திருந்துவானா?

இதுதான் மந்திரி மாதவனின் நிலை! கேளுங்களேன் இந்தக் குற்றச் சாட்டை நாங்கள் கூறவில்லை. அரசியல் காழ்ப்புணர்ச்சியில் கூறவில்லை. அவர் கட்சிக்கும் நமது கட்சிக்கும் முரண்பாடு! ஆகவே சாடுகிறோம் என்று நினைக்க வேண்டாம்!

முக்கியமானதொரு விஷயத்தைப் பற்றி மந்திரி மாதவன் பேசியிருக்கிறார்! என்ன பேசினார்?

"மத்திய அரசுகடைப்பிடிக்கின்றவரிவிதிப்புக்கொள்கையும் பொருளாதாரக் கொள்கையும் விலைவாசி உயர்வுக்குக் காரணமாயிருக்கின்றன. விலைவாசி உயர்வுக்கு உற்பத்தியாளர்கள் அல்லது வர்த்தகர்கள் மீது மட்டும் புகாரினைக் கூறி விட முடியாது.

"வளர்ச்சித் திட்டங்களை செயல்படுத்தத் தேவையான நிதி ஆதாரங்கள் குறையும்போது மத்திய அரசு பற்றாக்குறை வரவு—செலவுத் திட்டக் கொள்கையைக் கடைப்பிடிக்கிறது. இதனால் பணவீக்கம் ஏற்பட வழி உண்டாகிறது"

சபாஷ் மாதவனாரே! சபாஷ்!

இந்த உண்மையினை நீங்கள் கண்டுபிடித்தது எப்போது? பண்டிதன் நூரியோர் சங்கத்தில் சென்னையில் பேசிய நவம்பர் 17-ம் நாள் காலையில்தான் கண்டு பிடித்தீரா? புத்த பிரானுக்கு போதி மரத்தடிக்குப் போன பின் ஞானோதயம் பிறந்ததுபோல, பண்டிதனை நூரியோர் (அதாவது வாத்தியோரை) பார்த்த உடனே உங்களுக்கு இந்த ஞானம் பிறந்ததா?

இல்லை! இல்லை!

மந்திரி மாதவன் தனக்குஏற்கனவேதெரியாத ஒன்றைத் திடீரெனக் கண்டுபிடித்ததாக கூறவில்லை. தெரியும்; நன்றாகத் தெரியும். மந்திரி மாதவனும், அவருடைய இன்றைய அருமைக் குருநாதர் டாக்டர் கலைஞரும் எதிர்க் கட்சியிலே இருந்தபோது காங்கிரஸ்காரர்களைப் பார்த்துப் பேசிய பேச்சுத்தான் இது! அவர்கள் தேர்தல் கூட்டங்கள் தோறும் கோபாவேசத்துடன் முழங்கிய முழக்கந்தானே இது.

இத்தனை நாளும் இந்த அப்பட்டமான உண்மையைப் பேசாமல் இருந்துவிட்டு இப்பொழுது பேசக் காரணமென்ன?

மத்திய அரசின் வரி விதிப்புக் கொள்கையும், பொருளாதாரக் கொள்கையும், நோட்டு அச்சடித்துப் பயன்படுத்திக்கொள்ளும் கொள்கையுந்தான் விலைவாசி உயர்வுக்குக் காரணம் என்ற உண்மையை — இன்று மாதவனார் திருவாய் மலர்ந்திடக் காரணமென்ன?

மாதவனாருக்கு திடீரென போதி மரத்தடி ஞானோதயம் பிறந்திடக்காரணமென்ன?

ரூபாய் ஒன்றே முக்கால் விற்ற அரிசி திடீரென இரண்டரை இரண்டே முக்கால், மூன்று என்று உயர்ந்தது. புளி, மிளகாய், சர்க்கரை திடீர் திடீரென்று விலைகள் கிடுகிடுவென்று உயர்ந்துகொண்டே போகின்றன.

ஒரு டன் இரும்பு ரூ 670 என்பது கண்ட்ரோல் விலை இந்த கண்ட்ரோல் விலையில் இரும்பு வாங்க முடியுமா? கள்ளமார்க்கெட் விலை என்ன? நாலரை ரூபாய் விற்ற மண்வெட்டி இப்போ எட்டரை ரூபாய்!

நடுத்தர சிறு உற்பத்தியாளர்கள் என்ன விலை கொடுத்து இரும்பு வாங்குகிறார்கள்?

1 டன் இரும்பு இன்று ரூ 1800—ரூ.1900! இன்னும் உயருகிறது...... உயருகிறது......உயர்ந்துகொண்டே போகிறது...... இதுபோல் இன்னும் பல பொருள்கள்! இரும்புமன்னன் டாடா போல பெருமுதலாளிகள் அடிக்கிறார்கள் கொள்ளை! கொள்ளையோ கொள்ளை! சிறு நடுத்தர தொழில்களை நடத்துவோர் இழுத்து மூடி ஓடுகிறார்கள்! தொழிலாளிகள் தினம் கதவடைப்பு! ஆட்குறைப்பு! வேலைப்பறிப்பு! சம்பள வெட்டு! பஞ்சப்படி மறுப்பு! போனஸ் மறுப்பு!

விலைவாசி உயர்வாலும் சம்பள உயர்வு மறுக்கப்படுவதாலும் ஆட்சி பீடத்திலுள்ளோர் மீது அதிருப்தி—ஆத்திரம்—ஆவேசம் நாடெங்கும் பொங்கி வழிகிறது மக்களது போராட்டங்கள் புயல் வேகத்தில் வெடிக்கின்றன!

பீடித்தொழிலாளியிலிருந்து—மின்தொழிலாளிவரை—போக்குவரத்துத் தொழிலாளியிலிருந்து அரசாங்க ஊழியர் வரை—பாலை ஊழியர்களிலிருந்து—பட்டப்படிப்பு சொல்லித்தரும் ஆசிரியர் வரை—எங்கும் போர்! போர்! போர்! உரிமைப்போர்! ... உரிமை பெறும் வரை ஓயமாட்டோம்! நிறை சாயமாட்டோம் என்ற போர் முழக்கங்கள் மந்திரி மாதவனார் காதுகளிலே வந்து மோதுகின்றன!

அந்த உரிமைக்குரல் எழுப்பியவர்களை மாதவனார் அடித்தார்! அவர்தம் மண்டையை உடைத்தார் போலீசை ஏவி விட்டு!

ஆனாலும் போர் முழக்கம் ஓயவில்லை!

பலரைச் சிறையிலடைத்தார். அடைத்து விட்டு மன்னிப்புக் கடிதம் எழுதி வாங்கிப் பணிய வைக்க நினைத்தார்—நடக்கவில்லை!

மக்கள் போராட்டங்கள் மேலும் மேலும் விரிந்து பரந்து வளருகின்றன. கட்சி கொடி பேதம் பாராது ஒன்றிணைந்த வீரமிகுந்த போராட்டங்களாக விரிவடைந்து கொண்டே போகின்றன......!

இந்த நிலையில் என்ன வழி? சமாளிக்க எது வழி? எதைச் சொன்னால் தப்பிக்கலாம்......

இதுவே மந்திரி மாதவனார் பேச்சுக்கு பின்னணி!

விலைவாசி உயர்ந்து விட்டதுவே! ஐயகோ! உணவு விலை உயர்ந்ததே ஐயகோ! சர்க்கரை விலை உயர்ந்தே! ஐயகோ!- என ஒப்பாரி சொந்த கொண்டு தானும் ஒரு கூப்பாடு போட்டு விட்டு (இதுவே தி.மு.க. தலைவர்களின் தனித்திறமை!)

இந்த விலைவாசி உயர்வுக்கு காரணம் யார்தெரியுமா? டில்லி சிங்கங்களே!

**தேன் தமிழ் செம்மல்களே!**

கேளுங்கள்! நாங்களா! திராவிட முன்னேற்றக் கழக அரசு அல்ல—(வேறு யார்?) மத்திய அரசு டில்லி அரசு நாட்டாமை அரசு!

நாங்கள் பொறுப்பாளிகளேஅல்ல! அல்லவே அல்ல!- என்கிறார் மாதவனார்.

## மேற்கு வங்கம்...

(3- ஆம் பக்கத் தொடர்ச்சி)

செயலாளர் லால் ஜி. கிரி ஆகியோரை விசாரித்தோம்.

விக்ரம்கர் காலனியைச் சேர்ந்த கிழக்கண்ட வர்களையும் விசாரித்தோம்.

அனுராத நாக், சுசா மோகந்தா, லால்பகதூர் கமலா பானர்ஜி, படல் முகர்ஜி, கிடிஷ் பானர்ஜி சுகில்ராய், சத்தியதேப், சத்யாடே, மனிந்தராதார்

### துப்பாக்கி சப்ளை

நாள்தோறும் குண்டர்கள் தொடுக்கும் தாக்குதலைப்பற்றி அவர்கள் கூறினர். மத்திய ரிசர்வ் போலீஸ் குண்டர்களுக்கு எவ்விதம் உதவியாக உள்ளது என்பதையும் துப்பாக்கிகளையும் ரவைகளையும் தருகிறது என்பதையும் அவர்கள் கூறினர். குண்டர்கள் தொடர்ந்து சுட்டுக் கொண்டிருப்பதைப் பற்றியும் அவர்கள் கூறினர். மாவட்ட மாஜிஸ்டிரேட்டையும், போலீஸ் அதிகாரியையும் உதவி கோரி மலாகரும் செல் குப்தாவும் தொடர்ந்து கேட்டும்பலன் கிடைக்கவில்லை. 6—10—71 நண்பகலில் ஜாதவ்பூர் போலீஸ் அதிகாரி ஆர் கே. மகந்தி வந்து அவர்களை திட்டி விட்டும் மிரட்டிவிட்டும் தான் சென்றார் பெபல்முகர்ஜியும், சமீர்கங்கூலியும் துப்பாக்கி முனையால் இடிக்கப்பட்டனர் ரபின் சௌத்திரியும், நிரேஜ் சர்க்காரும், சமிர்சர்க்காரும் 14—10—71ல் கைதுசெய்யப்பட்டு விக்ரம் கார் காலனி சி. ஆர். பி. நிலையத்துக்குக் கொண்டு போகப்பட்டனர். அங்கு அவர்கள் குண்டர்களால் அடிக்கப்பட்டனர். பின்னர் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகும் போலீஸ் வேனில் காயப்படுத்தப்பட்டனர். 24 பர்கான மாவட்ட போலீஸ் சூப்பரிண்டெண்டிடம் இவர்களில் சிலரை 15-10-71 காயங்களுடன் காட்டினோம்.

ஜெய் எஞ்சினியரிங்தொழிற்சாலையில் வேலை செய்யும் லால்பகதூர் தன் வீட்டிலிருந்த குடும்பத்தினர் எவ்விதம் துப்பாக்கி குண்டுகளால் தாக்கப்பட்டனர் என்பதைக் கூறினார். தனக்கு ஏற்பட்ட காயங்களையும் காட்டினார். ஜெயா எஞ்சினியரிங் தொழிற்சாலை ஊழியர்கள் ஜமுனா தாகூரை 6-10-71 அன்று அவருடைய வீட்டில் குண்டர்கள் சுட்டுக்கொன்றனர். அவருடைய குடும்பம் இப்போது உத்திரபிரதேசத்திலுள்ள சொந்தக் கிராமத்துக்குச் சென்றுள்ளது.

### விக்ரம்கார் காலனியில் கொள்ளை

விக்ரம்கார் காலனியில் 6-10-71 அன்றுகாலை எவ்விதம் குண்டர்கள் (ஜகா, முக்பராரத்தன், பிஜய்கர் காலனியைச் சேர்ந்தநிகில், மாஸ்டர்ரத்தன் விக்ரம்கரை சேர்ந்த படா. பொட்டர் நகரைச் சேர்ந்த பாரி ஆகிய வழக்குகளில் சம்பந்தப்பட்ட கிரிமினல் குற்றவாளிகளும் இவர்களில் அடங்குவர்) தாக்கினர் என்பதை மக்கள் கூறக் கேட்டோம். காங்கிரஸ் கொடியைப் பறக்க விட்டுக்கொண்டு 'இந்திரா காந்தி யுக்யுக் ஜியோ" என்று கோஷித்துக்கொண்டு குண்டர்கள் வருகின்றனர். காலனிகளில் வசிப்பவர்களின் வீடுகளுக்கு துப்பாக்கிகளையும் கத்திகளையும் எடுத்துக் கொண்டு வருகின்றனர். பல வீடுகளில் குண்டர்களும், சி. ஆர். பியும் கூட்டாக கைக்கடிகாரங்களையும் ரேடியோக்களையும், நகைகளையும், பணத்தையும் கொள்ளையடித்துச் சென்றுள்ளனர். சத்தியாதே எவ்வாறு தன்னுடைய பலசரக்குக் கடை குண்டர்களால்கொள்ளையடிக்கப்பட்டது என்று கூறினார் கிதிஷ் பானர்ஜி கிதிஷ் சட்டர்ஜி, அருள் சர்க்கார், சியாமள் முகர்ஜி, பிபுல் முகர்ஜி முதலியவர்கள் தாக்கப்பட்டு கொலை செய்யும் நோக்கத்தில் வீட்டிலிருந்து கொண்டு செல்லப்பட்டனர். அவர்கள் தப்பிப் பிழைத்துள்ளனர். கிதிஷ் பானர்ஜியின் மனைவியான கமலாபானர்ஜி நையப்புடைக்கப்பட்டார் பல குடும்பங்கள் அனைத்தையும் விட்டுவிட்டு— காலனியை விட்டே சென்றுள்ளன. அவ்வாறு செல்லுமுன் அவர்களிடம் பயமுறுத்தி வெற்று கடிதாசியில் குண்டர்கள் கையெழுத்து வாங்கி வைத்திருக்கின்றனர். ஜாதவ்பூரில் 15-10-71 காலையில் மிட்டாய் கடை வைத்திருந்த பிஜய்பால் எவ்விதம் குண்டர்களால் சுட்டுக் கொல்லப்பட்டார் என்பதை மக்கள் கூறினர். 16-10-71 காலையில் குண்டடிபட்டி விக்ரம்கார் காலனியைச் சேர்ந்த கோபால்சகா பி.ஜி மருத்துவ மனையில் இன்னும் உயிருக்காகப் போராடிக் கொண்டிருக்கிறார்

### பாசிஸ்ட் தாக்குதலை நிறுத்துக

குடி மக்கள் மீது இந்த பாசிஸ்ட் தாக்குதலை உடனே நிறுத்தவேண்டும் என்று கோருகிறோம் அவர்களுடைய உயிரும் உரிமைகளும் பாதுகாக்கப்படவேண்டும் என்று கோருகிறோம்.

குண்டர்களுடன் சி. ஆர்.பி. காலனிக்கு வரும் போதெல்லாம் சிலஇளைஞர்கள் "கைது" செய்யப்பட்டு கூட்டிச் செல்லப்படுகின்றனர் குளத்துக்கு அக்கரையிலுள்ள குண்டர்களிடம் அவர்கள் ஒப்படைக்கப் படுகின்றனர். சி ஆர் பி. கள் முன்பே இந்த இளைஞர்கள் குண்டர்களால் அடித்து நொறுக்கப் படுகின்றனர். சிலசமயம் சி ஆர் பியினரும் சேர்ந்து அடிக்கின்றனர்.

அபாயகரமான முன்னுதாரணம் உருவாக்கப்பட்டு குண்டர்கள்—போலீஸ் பயங்கர வெறியாட்டத்தின் மூலம் சமூக அமைப்புக்கே பெருஞ் சேதம் விளைவிக்கப்படுகிறது உங்களுடைய ஆட்சி உருவாக்கும் பிசாசுக்கூட்டம் வளர்ந்து உருவாக்கியவர்களையே விழுங்கப் போவது நிச்சயம். பயங்கர வெறியாட்டம் நிற்பதற்கு நீங்கள் நடவடிக்கை எடுக்க வேண்டும். நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பதைத் தெரிய விரும்புகிறோம்.

உங்கள் உண்மையுள்ள மனோரஞ்சன் ராய் எம். பி அருண் பிரகாஷ் சட்டர்ஜி எம். பி. ஜடின் சக்கரவர்த்தி (தலைவர் யு. டி. யூ. சி) பிமலானந்த முகர்ஜி (சி ஐ.டி.யூ)

ஆம்! மத்திய அரசின் கொள்கைதான் — டாட்டா பிர்லாவைக் கொழுக்க வைப்பதே குறிக்கோளாகக் கொண்டு செயல்படும் மத்திய அரசின் கொள்கைதான்- காரணமென்றால், மந்திரி மாதவனாரே......

அந்த டாட்டாவின் கூஜாவான இந்திரா அரசின் கூஜாவாக உங்கள் அரசு செயல்படுவது ஏன்? ஏன்? ஏன்?

—கே. எம்.

# இரும்பாலையால் பாதிக்கப்படும் விவசாயிகளுக்கு நஷ்டஈடு தருக!

## சேலம் மாவட்ட மார்க்சிஸ்ட் மாநாடு கோரிக்கை!

மேட்டூர் நவ. 18— இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் சேலம் மாவட்ட மாநாடு அக் 29, 30, 31களில் மேட்டூரில் சிறப்பாக நடைபெற்றது. பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாநாட்டுத் துவக்கத்தில் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

சேலம் தர்மபுரி மாவட்டங்களில் உள்ள தரிசு நிலங்களை நிலம் இல்லாத ஏழை விவசாயிகட்கு பட்டா வழங்காதிருப்பதைக் கண்டிப்பதுடன் பட்டா வழங்க வேண்டும் என்றும், சாகுபடிக்கு தகுதியான காட்டு இலாக்கா நிலங்களை நிலம் இல்லாத கூலி விவசாயிகட்கு வழங்க வேண்டுமெனவும் மாநாடு கேட்டுக் கொண்டது. இதற்கான கிளர்ச்சிகளை நடத்த விவசாய தொழிலாளர்களையும் ஏழை விவசாயிகளையும் திரட்டும் பணியில் கட்சி அணிகள் உடனே ஈடுபட வேண்டும் என்று இம்மாநாடு கேட்டுக் கொண்டது.

### நஷ்டஈடு தருக!

சேலம் மாவட்டத்தில் கஞ்சமலைப் பகுதியில் இரும்புத் தொழிற்சாலை ஆரம்பிப்பதற்காக சிறு நில விவசாயிகளிடம் இருந்து ஆர்ஜிதம் செய்துள்ள நிலத்திற்கு மார்க்கெட் நிலவரத்திற்கு அரசாங்கம் நிர்ணயித்து விலையைக் கொடுக்க வேண்டும் என்றும் காலி செய்யப்படும் விவசாயிகட்கு மாற்று நிலம் கொடுக்கப்பட வேண்டுமெனவும் மாநாடு கேட்டுக்கொண்டது.

மேட்டூர் ஆர். சி. பிளான்ட், சேலம் தோல் ஷாப் கழிவு நீரால்பாதிக்கப்பட்டவிவசாயிகட்கு நஷ்டஈடு தரவேண்டும்.

### விடுதலை செய்க!

சேலம் ஜில்லா பள்ளிபாளையத்தில் விசைத்தறி தொழிலாளர்கள் மீது, போலீசார் தொடுத்த கொடுமையான அடக்குமுறையைக்கண்டிப்பதுடன்சம்பவத்தைப் பற்றி சரியான நீதி விசாரணை நடத்த வேண்டும் என்றும், கைது செய்யப்பட்டுள்ள தொழிலாளர்களை உடனடியாக விடுதலை செய்ய வேண்டும் என்றும், அவர்கள் மீது தொடுக்கப்பட்டுள்ள வழக்கை வாபஸ் பெற வேண்டும் என்றும் மாநாடு மாநில அரசை கேட்டுக்கொண்டது.

### வறட்சிப்பகுதி

தர்மபுரி மாவட்டத்தை வறட்சிப்பகுதி என்று அறிவித்து விவசாயிகட்கு நிவாரணம் அளிக்க வேண்டும் என மாநாடு கேட்டுக் கொண்டது. மற்றும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### புதிய மாவட்டக்குழு

மாநாட்டின் இறுதி நாளான 31ம் நாளன்று மாவட்டக்குழு தேர்வு நடைபெற்றது. 15 தோழர்கள் கொண்ட மாவட்டக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது மாவட்டக் குழு உறுப்பினர்கள் விவரம் வருமாறு:-

கே. எஸ். அர்த்தநாரி, பி. தர்மலிங்கம், ஏ. பெரியதம்பி, பி அமரப்பன் பி ராமசாமி, பி. ராஜு, எஸ் ஜி ராகவன், எஸ் கணபதி, ஏ சிவமலை எல் துரைசாமி, கே சி. கிருஷ்ணன், எம். பழனி, எம். வேடியப்பன், ஆர். குப்புசாமி நாராயணன் (திருச்செங்கோடு)

அன்று மாலையில் சிறப்பான ஊர்வலமும், பொதுக்கூட்டம் நடைபெற்றது.

# பம்பாயில் அரிஜனங்கள் மீது கடுந் தாக்குதல்

பம்பாய், நவ. 18— மகாராஷ்டிர மாநிலத்தில் மராத்வாடா பகுதியிலுள்ள ஒரு கிராமத்தில் அரிஜனங்களை உயர் ஜாதியினர் அடித்து நொறுக்கியிருக்கின்றனர்.

இருபது நாட்களுக்குமுன்பே இந்தக் கொடுஞ்செயல் நடந்திருந்தும் ஒரு பத்திரிகையும் இச்செய்தியை வெளியிடவில்லை. ஒரே ஒரு மராட்டிய பத்திரிகைதான்வெளியிட்டது.

### எந்த நடவடிக்கையும் இல்லை

இந்தப் பகுதியைச் சேர்ந்த ராஜாங்க மந்திரி திரு. சுந்தர் ராவ் சோலங்கியோ அல்லது அந்த தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் காங்கிரஸ் எம். எல். ஏ.வோ இந் நிகழ்ச்சி பற்றி ஒன்றும் கூறவில்லை. அரசாங்க அதிகாரிகளும் 'ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை.

'மதல் மோஹி' கிராமத்தைச் சேர்ந்த அந்த ஏழை அரிஜன விவசாயிகள் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டுறவு பண்ணையை ஆரம்பித்தார்கள். பெரு முயற்சிக்குப்பின் அதற்கு அனுமதியும் வழங்கப்பட்டது சிறிது நிலமும் அளிக்கப்பட்டது

அரிஜனங்கள் இவ்வாறு ஒன்றுபட்டு கூட்டுறவு பண்ணை ஆரம்பிப்பதற்கு சிலஉயர்ஜாதியினர் ஆட்சேபம் தெரிவித்தனர். எனினும் அவ்வூர் பஞ்சாயத்து போர்டு அதற்கு ஆதரவு தெரிவித்தது

### உயர் ஜாதியினர் தாக்கினர்

இதனால் ஆத்திரமடைந்த உயர்ஜாதியினர், ஹரிஜனங்கள் தங்கள் நிலங்களில் 'ராகி' பயிருக்கு விதை தூவும்போது, அவர்களைத் தாக்கினர். பலர் படுகாயம் அடைந்தனர்.

காயமடைந்தோரில் அந்தக் கூட்டுறவு பண்ணையின் தலைவரும் ஒருவர். பண்ணையின் நிர்வாகக்குழு உறுப்பினர் பலருக்கு பலத்த காயம் ஏற்பட்டுள்ளது. இருவருக்கு காலில் சரியான அடி.

காயமடைந்த அனைவரும் 'பிர்' 'கேவராய்' அரசாங்க மருத்துவமனைகளில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகின்றனர்.

### இந்திரா காங்கிரஸ் ஆட்சியில்தான்

பின்தங்கிய வகுப்பினருக்கு, அதிலும் குறிப்பாக அரிஜனங்களுக்கு, அரசியல் சட்டத்தில் சிறப்பிடம் அளிக்கப்பட்டுள்ளது. அவர்கள் உரிமை பாதுகாக்கப்படுவதற்கு விசேட கவனம் செலுத்தப்படுகிறது அவர்களுக்கெனவே, மத்தியிலும், மாநிலத்திலும் தனி அமைச்சர்கள் உள்ளார்கள் என்று பீற்றிக்கொள்ளும் அதே சமயத்தில்தான் இத்தகைய கொடுஞ்செயல் நடைபெற்றிருக்கிறது. சோஷலிச சிற்பிகளின் முற்போக்கு அரசான இந்திரா காங்கிரஸ் தலைமையிலுள்ள மராட்டிய மாநிலத்தில் தான் இத்தகைய கொடுஞ்செயல் நடைபெற்றிருக்கிறது

## தியாகி மணவாளன் குழுவினர் இன்னிசை

தேனி, நவ. 18— மதுரை - முகவை மாவட்ட 9 - வது மாநாட்டை ஒட்டி 12—11—71ம் தேதி அல்லி நகரத்திலும், 13—11—71ம் தேதி தேனி பகவதியம்மன் கோவில் திடலிலும் தியாகி மணவாளன் குழுவினரின் இன்னிசை சிறப்பாக நடைபெற்றது.

# தொழிற்சங்க ஊழியருக்கு மண்டையில் வெட்டு

## தொழிலாளர் போராட்டத்தை ஒடுக்க காலிகள் ஏவிவிடப்பட்டனர்!

மதுரை, நவ. 19— திருமங்கலத்திலுள்ள மெட்டல் பவுடர் கம்பெனியின் தொழிலாளர் சங்கக் காரியதரிசி கே. தங்கமணியை கொலை செய்யும் நோக்கத்தில் தாக்கி படுகாயப் படுத்தியுள்ளனர்

நவ. 16-ந் தேதி இரவுவேலை முடிந்து அவர் வரும்போது ஐந்து ரவுடிகள் அரிவாளாலும் கம்புகளாலும் தாக்கியுள்ளனர். மண்டையில் வெட்டு விழுந்து படுகாயமுற்ற அவர் திருமங்கலம்மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளார்.

இந்தக் கொலை முயற்சியை கம்பெனி நிர்வாகம் தான் தூண்டி விட்டிருப்பதாக தொழிற்சங்கத்தின் சார்பில் போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது.

தொழிலாளர்கள் சி.ஐ.டி.யூ சங்கத்தில் சேர்ந்து சம்பள உயர்வு, கிராஜுவிடி கோரிக்கைகளை முன்வைத்து போராடிவருகிறார்கள். லேபர்அதிகாரி முன் விசாரணை நடைபெறுகிறது.

தொழிலாளர் சங்கத்தில் சேர விருப்பமில்லை என்றுகூறி எழுதித் தருமாறு தொழிலாளர்களை நிர்வாகம் நிர்ப்பந்தப்படுத்தி வருகிறது. இந்த முயற்சி பலிக்காததினால் ஆத்திரமடைந்து இந்தத்தாக்குதல் தூண்டி விடப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

போலீசார் இந்த வழக்கை சரிவர நடத்தவிடாமல் தி.மு.க. வட்டச் செயலாளரும் மற்ற தி மு. க. முக்கியஸ்தர்களும் முயலுவதாகத் தெரிகிறது.

இந்தக் கொலை முயற்சியையொட்டி கைது செய்யப்பட்டிருக்கும் 5 பேரையும் தி. மு, க. வினர் ஜாமீனில் எடுத்துள்ளதாகத் தெரிகிறது.

## "தீக்கதிர்" வளர்ச்சி நிதி

வெட்டுவாக்கோட்டைக் கிளைச் செயலாளர் தோழர் ஏ. மூக்கையனின் ஆண் மகவுக்கு செவ்வானம் என தோழர் பி. ஆர். அவர்கள் பெயர் சூட்டியதையொட்டி ரூ. 5/- தீக்கதிர் வளர்ச்சி நிதி அளிக்கப்பட்டது.

# சுதந்திரம் டிரான்ஸ்போர்ட் முதலாளி வீட்டு முன் தோழர் மன்னுர்சாமி உண்ணாவிரதம்!

மதுரை, நவ. 19 - சுதந்திரம் டிரான்ஸ்போர்ட் தொழிலாளர்கள் 52 நாட்களாக வேலை நிறுத்த போராட்டம் நடத்தி வரும் நிலையிலும் நியாயமான பேச்சுவார்த்தைக்கு வராத காரணத்தினால் மதுரை மோட்டார் தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர் தோழர் எஸ். மன்னுர்சாமி இன்று காலை முதல் போராட்டம் தொடங்கியுள்ளார்.

அனுமார்கோவில் படித்துறையில் சுதந்திரம் டிரான்ஸ்போர்ட் முதலாளி வீரபத்திரத்தேவர் வீட்டுக்கு முன்னால் உண்ணாவிரதப் போராட்டம் நடைபெறுகிறது.

இந்தத் தகராறைப் பேசித் தீர்ப்பதற்கு நவம்பர் 2-ம் தேதி பேச்சு வார்த்தையில் திரு. வீரபத்திரத்தேவர் கலந்துகொண்டார். இரவு 11 மணி ஆகிவிட்டதால் மறு நாள் காலையில் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம் என்று கூறி விட்டுச் சென்ற வீரபத்திரத் தேவர் சொன்ன வார்த்தையிலிருந்து மாறியுள்ளார்.

நவ. 2-ம் தேதி ஒப்புக்கொண்டதை அமுல் நடத்த மறுப்பதுடன் சில தொழிலாளர்களை வேலையை விட்டு நீக்க வேண்டும் என்றும் அதற்குத் தொழிற்சங்கம் சம்மதித்தால் தான் ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவேன் என்றும் வீரபத்திரத்தேவர் பிடிவாதம் செய்கிறார்.

மாவட்டக் கலெக்டரும், போலீஸ் அதிகாரியும், தொழிலாளர்துறை அதிகாரியும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் சுதந்திரம் டிரான்ஸ்போர்ட் முதலாளி வீரபத்திரத் தேவர் (இந்திரா காங்கிரஸ் தலைவர்) அடங்காபிடாரித்தனம் செய்கிறார்.

முதலாளியின் இந்தப் போக்கை எதிர்த்து தோழர் எஸ். மன்னுர்சாமியின் காலவரையற்ற உண்ணாவிரதம் தொடங்கியுள்ளார்.

சுதந்திரம் டிரான்ஸ்போர்ட் தொழிலாளர்கள் உறுதி குலையாமல் தொடர்ந்து வேலைநிறுத்தம் செய்துவருகின்றனர்

## தீக்கதிர், கட்சி அலுவலகத்திற்கு கடிதங்கள் அனுப்புவோர் கவனத்திற்கு...

தோழர்களே!

தீக்கதிருக்கும், கட்சி அலுவலகத்திற்கும் கடிதங்கள் அனுப்புவோர், புதிதாக விதிக்கப்பட்டுள்ள " அகதிகள் வரி கட்டண ஸ்டாம்பை " வாங்கி ஒட்டாததால் இங்கு வரும் ஒவ்வொரு கவருக்கும் நாங்கள் 10 பைசா அபராதம் கொடுத்து வாங்கவேண்டியிருக்கிறது என்பதை உங்கள் கவனத்திற்கு கொண்டுவருகிறோம்.

அகதிகள் நிவாரண வரி என்று முத்திரையிடப்பட்ட 5 பைசா ஸ்டாம்பு ஒவ்வொரு போஸ்ட் ஆபீசிலும் விற்பனையாகிறது.

அதைவாங்கி, ஏற்கனவே உள்ள மாமூலான கட்டண ஸ்டாம்புடன் சேர்த்து ஒட்டி அனுப்பினால்தான் இந்த அபராதம் விதிக்கப்படமாட்டாது.

மேற் குறிப்பிட்ட நிவாரண ஸ்டாம்பு அல்லாமல், சாதாரண ஸ்டாம்பு ஒட்டினால் செல்லாது.

ஆகவே, முறையாக ஸ்டாம்புகள் ஒட்டி அனுப்ப வேண்டும்.

கவர், இன்லண்ட் கவர், புக் போஸ்ட் ஆகியவைகளுக்குத்தான் இந்தக் கட்டணம், கார்டுக்கு கிடையாது.

அலுவலகம்,
மாநிலக் குழு.

## மதுரையில்

★ ★ ★ ★



★ ★ ★ ★

**பி. ராமமூர்த்தி**
பேசுவார்

## பேரவைக் கூட்டம்

21-11-71 ஞாயிறு
காலை 9-30 மணிக்கு
பாலரெங்காபுரத்தில்
(தினமணி டாக்கீஸ் சமீபம்)
கட்டணம் ; 25 காசுகள்

பேரவைக் கூட்டத்துக்கு கட்சி உறுப்பினர்களும் அனுதாபிகளும் அனுமதிக்கப்படுவர்.

## முனிச்சாலையில் பொதுக் கூட்டம்

21-11-71 ஞாயிறு மாலை 7 மணிக்கு

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் — ஆசிரியர் : கே. முத்தையா.